தமிழ் நூல்கள் நாட்டுடைமை என்பது 1964-ல்
பாரதியின் படைப்புகளிலிருந்து தொடங்கியது எனலாம்.
இதன் தொடர்ச்சியாக 2010 ஆண்டு வரையிலும் நாட்டுடைமை
ஆன 118 ஆறிஞர்களின் நூல்களை பதிவு செய்கிறது இந்நூல்.

thamizhbooks.com



பாரதி புத்தகாலயம்

புதிய புத்தகம் பேசுது




0016980

**NAATTUDAIMAI: TAMIL ARIGNAR NOOLGAL**

**Muthaiya Vellaiyan**
First Published : April, 2011

**Published by**

**PUTHIYA PUTHAGAM PESUTHU**
421, Anna Salai, Teynampet, Chennai - 600 018
Email: thamizhbooks@gmail.com
www.thamizhbooks.com

நாட்டுடைமை: தமிழ் அறிஞர் நூல்கள்

தொகுப்பு: முத்தையா வெள்ளையன்
முதல் பதிப்பு: ஏப்ரல், 2011
வெளியீடு:

புதிய
புத்தகம் பேசுது
421, அண்ணாசாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018
தொலைபேசி : 044-24332424, 24332924,

விற்பனை உரிமை




7, இளங்கோ சாலை, தேனாம்பேட்டை, சென்னை - 600 018
**திருவல்லிக்கேணி:** 48, தேரடி தெரு | **திருவான்மியூர்:** 1, 100அடி சாலை, தரமணி
**பெரம்பூர்:** 52, கூக்ஸ் ரோடு | **ஈரோடு:** 39, ஸ்டேட் பாங்க் சாலை
**கோவை:** 566, 2 வது தெரு விரிவு, காந்திபுரம் | **திண்டுக்கல்:** 3சி18, எல்.பி.ஜி. காம்பவுண்ட்
**நாகை: 1,** ஆரியபத்திரபிள்ளை தெரு | **திருப்பூர்:** 447, அவினாசி சாலை
**திருவாரூர்:** 35, நேதாஜி சாலை | **சேலம்:** 36/1 அத்வைத ஆஸ்ரமம்சாலை
**மயிலாடுதுறை:** 147, பட்டமங்கலத் தெரு | **அருப்புக்கோட்டை:** 31, அகமுடையார் மகால்
**புதுக்கோட்டை:** வடக்கு ராஜா வீதி | **மதுரை:** 37A, பெரியார் பேருந்து நிலையம்
**மதுரை:** சர்வோதயா மெயின்ரோடு, மகபூப்பாளையம் | **குன்னூர்:** N.K.N வணிகவளாகம் பெட்போர்ட் | **செங்கற்பட்டு:1** டி., ஜி.எஸ்.டி சாலை | **விழுப்புரம்:** 26/1, பவானி தெரு
**திருநெல்வேலி:** 25A, ராஜேந்திரநகர் முதல் தெரு, | **விருதுநகர்:** 131, கச்சேரி சாலை
**கும்பகோணம்:** 352, பச்சையப்பன் தெரு | **வேலூர்:** S.P. Plaza 264, பேஸ் II , சத்துவாச்சாரி
**நெய்வேலி:** பேருந்து நிலையம் அருகில், | சிஐடியு அலுவலகம் **தஞ்சாவூர்:** காந்திஜி வணிக வளாகம் காந்திஜி சாலை | LIC கோட்ட அலுவலகம் எதிரில்) தஞ்சாவூர் - 613001.
**தேனி:** 12,பி, மீனாட்சி அம்மாள் சந்து, இடமால் தெரு
**கடலூர்:** பஜார், ஜீவா மார்க்கெட், பழைய அண்ணா பாலம்

ரூ.110/-
அச்சு : ஜோதி எண்டர் பிரைசஸ், சென்னை - 5

# அறிவுச் செல்வம் அனைத்தும் மக்களுக்குரியது....

“பாரதி மக்களுக்குச் சொந்தமானவன். அவனது படைப்புகள் வெகுமக்களைச் சென்றடைதல் வேண்டும்” என்று ஜீவா, டாக்டர் ப. சுப்பராயன் போன்ற பெருமக்கள் முதற்குரல் கொடுத்தனர். 1950-களில் அரசு பாரதியின் படைப்புகளை நாட்டுடைமை ஆக்கியபோது தமிழ்மக்கள் அனைவரும் ஒரு முகமாக வாழ்த்தி வரவேற்றனர். தேர்ந்தெடுத்த சில படைப்புகள் நாட்டுடைமை - மக்கள் உடைமை ஆக்கப்படுவதன் அவசியம் உணரப்பட்டது.

ஆதிக்கசக்திகள் “எரிமலை” மற்றும் “இராவணகாவியம்” போன்ற நூல்களைத் தடை செய்தபோது, இந்தத் தடைகள் நீக்கப்பட வேண்டும், அந்த நூல்களை மக்கள் படிக்க வகை செய்யவேண்டும் என்ற உணர்வு எழுந்தது. காலங்கடந்து மக்கள் விருப்பம் நிறைவேறியது.

மே. வங்கம், கேரளம், கர்நாடகம் உள்ளிட்ட வளர்ந்த மாநிலங்களை முந்திக்கொண்டு தமிழக அரசுகள் சிறந்த படைப்புகளை நாட்டுடைமை ஆக்குவதில் ஆர்வம் காட்டி வருவது போற்றத்தக்கது. ஆனால் நாட்டுடைமை ஆக்கப்படுவதற்குத் தகுதி உடைய படைப்புகளைத் தேர்ந்தெடுப்பதில் இதுவரை வெளிப்படையாகச் செயல்படவில்லை. அரசியல் மற்றும் தனிநபர் விருப்புகள் அடிப்படையில் பெரும்பாலான தேர்வுகள் அமைகின்றன. அவ்வாறே நாட்டுடைமை ஆக்கப்படும் படைப்பாளிகள் அல்லது அவர்களுடைய வாரிசுகளுக்கு வழங்கப்படும் ஈட்டுத்தொகை அளவும் விமர்சனத்துக்கு உள்ளாகிறது. சான்றாக, வையாபுரிபிள்ளையின் நூல்களுக்கான ஈட்டுத்தொகை 3 லட்சம், ம.பொ.சி. நூல்களுக்கான பரிவுத்தொகை 20 லட்சம்! இது எவ்வகை நியாத்தின் பாற்பட்டது?

ஆபிரகாம்பண்டிதர், கா.சு.பிள்ளை, நாவலர், அராகவன் போன்றோரின் படைப்புகள் நாட்டுடைமை ஆக்கப்பட்டதை எத்தனைபேர் அறிவர்? இவற்றையெல்லாம் மக்களுக்கு மீண்டும் மீண்டும் உணர்த்த அரசு தவறிவிட்டதாகவே தோன்றுகிறது. அரசுத்துறையினர் உள்ளிட்ட அறிஞர் குழு ஒன்று முறையாக அமைக்கப்பட்டு அவர்களுடைய ஏகமனதான பரிந்துரையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும் படைப்புகள் நாட்டுடைமை ஆக்கப் பெற வேண்டும். இதிலாவது வெளிப்படைத்தன்மை இருக்க வேண்டும்.

தமிழ்மொழியில் வெளிவந்த சிறந்த நூல்கள் எனும்போது ஈழம் உள்ளிட்ட பிற மாநிலங்களிலிருந்தும் (புதுவை மாநிலம் தவிர) அருமையான படைப்புகள் வெளிவருவது கணக்கில் கொள்ளப்பட வேண்டும். அந்தந்தப் படைப்பாளிகளிடம் தொடர்பு கொண்டு அவர்களுடைய அனுமதியை முறையாகப் பெற்று அந்த நூல்கள் தமிழ் மக்களுக்குக் கிடைக்கச் செய்தல் வேண்டும். குறிப்பிட்ட படைப்புகளை நாட்டுடைமை ஆக்குவதன் நோக்கம், அவை எளிதில் மக்களைச் சென்றடைதல் வேண்டும் என்பதே. அதாவது தரமான பதிப்புகள் நியாய விலையில் மாணவர்கள் உள்ளிட்ட அனைத்துத்தரப்பினரும் வாங்கத்தக்க விலையில் கொண்டுவரப் படவேண்டும். தமிழ்நாடு அரசே இப்பணியை முன்னின்று மேற்கொள்ளலாம்.

தமிழ்ச் செவ்விலக்கியங்கள் பலவும் இன்று மாணவர்கள் வாங்கிப் படிக்கும் விலைக்குக் கிடைப்பதில்லை. தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, நன்னூல் போன்ற பேரிலக்கிய-இலக்கண நூல்களின் ஆசிரியர்களுக்குப் பரிவுத் தொகை தர வேண்டுவதில்லை. அவற்றின் text தான் பொதுசொத்து. பதிப்பு முறை எங்கள் உரிமை சார்ந்தது என வாதிடுவோர் உள்ளனர்! தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் துணையுடன் அறிஞர் குழு ஒன்றை அமைத்து செவ்விலக்கியங்கள் அனைத்தையும் புதிய பதிப்புகளாக (ஷேக்ஸ்பியரின் படைப்புகளுக்கு ஆர்டென், வெரிடி, கேம்பிரிட்ஜ், கிளாரென்டன் (ஆக்ஸ்போர்டு) பதிப்புகள் போன்று) மலிவு விலையில் கொண்டு வர வேண்டும். பரிமேழலகர் உரைக்கும் மணக்குடவர் உரைக்கும் உரிமை கொண்டாடும் அவலம் களையப்படவேண்டும். இது copy-left காலம். அறிவுச் செல்வம் அனைத்தும் மக்களுக்கு உரியது. அச்செல்வம் அவர்களை எளிதில் சென்றடைதல் வேண்டும்.

சிறந்த படைப்புகளை நாட்டுடைமை ஆக்குதல் தொடரவேண்டும்; இப்பணி விரிவுபடுத்தப்பட வேண்டும். அதில் வெளிப்படைத்தன்மை இருக்க வேண்டும். நூற்பயன் மக்களைச் சென்றடைதல் வேண்டும். இப்பணிக்காக எங்களுக்கு பேருதவி செய்த நூலகஞானி ப.பெருமாள் அவர்களுக்கு பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம்.

- பதிப்பகத்தார்



# நூல்கள் நாட்டுடைமையாக்கப்பட்ட விபரம்

# நாட்டுடைமை - 1931



1882-1921

## மகாகவி பாரதியார்

பாரதி நூல்களை நாட்டுடைமையாக்க வேண்டும் என்ற கிளர்ச்சி 1948 கடைசியிலும் 1949 முற்பகுதியிலும் வலுத்து வந்தது. இந்தக் கிளர்ச்சியின் விளைவாக ஓமந்தூர் பி. ராமசாமி ரெட்டியாரை முதன் மந்திரியாகக் கொண்ட சென்னை மாகாண மந்திரிசபை 1949 ஆம் ஆண்டில் இதற்கான நடவடிக்கை மேற்கொண்டது. இதே ஆண்டில்தான் பாரதி பிரசுராலயத்திடமிருந்து பாரதியாரின் நூல்களை அரசாங்கம் விலைக்கு வாங்கியது. பாரதி பாடல்களின் ஒலிப்பதிவு உரிமையை ஏ.வி. மெய்யப்ப செட்டியார் இலவசமாக வழங்கினார். இதற்கு முன்பாக பாரதியாரின் படைப்புகள் என்ன சூழலில் இருந்தன என்பதைத் தெரிந்து கொள்வது முக்கிய தேவையாகவும் இருக்கிறது.

1931ல் பாரதியின் குடும்பத்தார் பாரதி நூல் உரிமைகளை 4000 ரூபாய்க்கு பாரதி பிரசுராலயத்திற்கு விற்றனர். ஏற்கனவே பாரதியின் இளையமகள் சகுந்தலாவின் கல்யாணச் செலவுக்காக வாங்கிய கடனைத் தீர்த்து, மீதமுள்ள தொகையை சில தவணைகளில் செல்லம்மாவிடம் தருவதாக ஒப்பந்தமாகியது. இந்தச் சமயத்தில் பாரதிபாடல்களை ஒலிப்பதிவு செய்யும் உரிமையை ஏ.வி. மெய்யப்ப செட்டியாரின் நிறுவனமான சரஸ்வதி ஸ்டோர்ஸ் 400 ரூபாய்க்கு வாங்கிக் கொண்டது.

1935ம் ஆண்டில் பாரதிநூல்கள் விற்பனையினால் பாரதியின் மனைவிக்கு தக்க லாபம் கிடைக்கவில்லை என்று புகார் எழுந்தது. தாம் வறுமையால் வாடுவதாகவும், பாரதி பிரசுராலயம் குறித்த தவணைகளில் பணம் அனுப்ப வில்லை என்றும், செல்லம்மாபாரதி புகார் கூறினார். இவருக்கு ஆதரவாக பல இளைஞர்கள் கிளர்ச்சி செய்தனர். ஆனால் இந்தப் புகார்களை பாரதி பிரசுராலயத்தினர் மறுத்தனர்.

இந்தச் சூழ்நிலையில் அரசு பாரதியின் பாடல்களை நாட்டுடைமையாக்கும் போது பாரதியின் மனைவி செல்லம்மாவுக்கு 10,000ரூபாயும், பாரதியின் புதல்வியர் தங்கம்மா மற்றும் சகுந்தலா இருவருக்கும் தலா 5,000 ரூபாய் நிதியுதவி அளித்தது. பாரதி குடும்பத்தாரின் சம்மதமும் பெற்று அரசாங்கம் பாரதியின் நூல்களின் உரிமைகளை ஏற்றுக் கொண்டது.

பாரதி பிரசுராலயத்திடமிருந்து அரசாங்கம் உரிமையை வாங்கிக் கொண்ட போது, அவர்களிடம் உள்ள நூல்களையும் எடுத்துக் கொண்டது. அந்த நூல்கள் சென்னை அரசாங்க நூல் விற்பனை நிலையத்தில் ஒப்படைக்கப்பட்டன.

அரசாங்கம் பாரதியின் நூல்களை விற்றாலும் சிவப்புநாடா முறையால் நூல் இருக்கிறதா? இல்லையா என்று தெரியாமல் பொதுமக்கள் சிரமப்பட்டனர். பாரதி கவிதைத் தொகுதியை அரசாங்கம் வெளியிட்ட சிறிது நாளிலே யார் வேண்டுமானாலும் பிரசுரிக்கலாம் என்று அனுமதித்தது. இந்த உரிமையைப் பயன்படுத்தி இன்றும் பல பதிப்பகங்கள் பாரதியாரின் படைப்புகளை வெளியிட்டு வருகின்றன.

பாரதியின் பாடல்கள் தனி உரிமையாக இன்றி மக்கள் உரிமையாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் 'பாரதி விடுதலை இயக்கம்' நடந்தது. அதே சமயம் எட்டயபுரத்தில் நடைபெற்ற பாரதி பாடல்களை நாட்டுடைமையாக்க வேண்டும் என்ற கூட்டத்தில் கம்யூனிஸ்ட்கட்சித் தலைவர் ப. ஜீவானந்தம் பேச அனுமதி மறுக்கப்பட்டது. பிறகு நடந்த சிறு கிளர்ச்சியின் விளைவாக அவர் பேச அனுமதிக்கப்பட்டார். அந்த இயக்கத்தை முன் நின்று நடத்தியவர்கள் டி.கே.சண்முகம், நாரணதுரைக்கண்ணன், திருலோக சீதாராம், வல்லிக்கண்ணன் அ.வெ.ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் ஆகியோரைக் கூறலாம்

**பாரதி காலத்தில் வெளியான நூல்கள்**

1. புதிய கட்சியின் கொள்கைகள் 1907
2. புனா சிவாஜி உற்சவத்தில் ஸ்ரீ திலகரின் உபந்யாஸம் 1907
3. ஸ்வதேச கீதங்கள் (சிறு பிரசுரம்) 1907
4. ஸ்வதேச கீதங்கள் (முதல் பாகம்) 1908
5. எங்கள் காங்கிரஸ் யாத்திரை 1908
6. ஜன்மபூமி (ஸ்வதேச கீதங்கள் - இரண்டாம் பாகம்) 1909
7. ஞான ரதம் 1910
8. கனவு 1910
9. ஆறிலொரு பங்கு 1910
10. பாஞ்சாலி சபதம் (முதல் பாகம்) 1912
11. புதிய ஆத்திசூடி 1913
12. The Fox with the Golden Tail 1914
13. மாதா மணிவாசகம் 1914
14. கண்ணன் பாட்டு 1917
15. நாட்டுப்பாட்டு 1917
16. பாப்பா பாட்டு 1917
17. முரசு 1917
18. மகாகவி ஸர் ரவீந்திரநாத் தாகூர் அருளிய பஞ்ச வியாஸங்கள் 1918
19. பாரத ஜன சபை (முதல் பாகம்) 1918
20. ஜீவ வாக்கு 1918
21. பாரத ஜன சபை (இரண்டாம் பாகம்) 1920
22. கதா மாலிகா 1920

**பாரதி காலமான பின்னர் வெளியிடப்பட்ட பாரதி ஆசிரம பாரதி பிரசுராலய நூல்கள்**

1. சுதேச கீதங்கள் (முதற்பாகம்) 1922
2. சுதேக கீதங்கள் (இரண்டாம் பாகம்) 1922
3. குயில் பாட்டு - கண்ணன் பாட்டு - பாரதி அறுபத்தாறு 1923
4. பாஞ்சாலி சபதம் (முதல் இரு பாகங்கள்) 1924
5. பகவத்கீதை முன்னுரை 1924 - 1925
6. பகவத்கீதையின் மூலமும் - உரையும் 1924-1925
7. சுதேச கீத சங்கிரஹம் 1925
8. சந்திரிகையின் கதை 1925-1926
9. தராசு 1928
10. நவதந்திரக் கதைகள் 1928
11. வேத ரிஷிகளின் கவிதை 1928



12. பதஞ்சலி யோக ஸூத்ரம் 1928
13. விநாயகர் நான்மணிமாலை 1929
14. தேசிய கீதங்கள் 1929
15. தோத்திரப் பாடல்கள் 1930
16. வேதாந்தப் பாடல்கள் 1930
17. காட்சி 1930
18. சித்தக் கடல் 1930
19. கதைக்கொத்து 1931
20. சுதேச கீதத்திரட்டு 1931
21. கட்டுரைகள் - 1. தத்துவம் 1935
22. கட்டுரைகள் - 2. மாதர் 1935
23. கட்டுரைகள் - 3. கலைகள் 1935
24. கட்டுரைகள் - 4. சமூகம் 1935
25. ஸ்யசரிதையும் பிற பாடல்களும் 1937
26. Agni and other Poems and Translations 1937
27. Essays and other Prose Fragments 1937
28. பாரதி கீதத் திரட்டு 1938
29. வேத ரிஷிகளின் கவிதை (தொடர்ச்சி) 1941
30. பாரதி மணிமலர் 1948

# 1984*, 2006



(1906-1995)

## ம.பொ.சிவஞானம்

சிலம்புச் செல்வர் ம.பொ.சி. என்று அழைக்கப்படும் ம.பொ.சிவஞானம் தமிழகத்தின் முக்கியமான ஆளுமைகளில் ஒருவர். சுதந்திரப் போராட்ட வீரர். மேடைத்தமிழ் வளர்த்ததில் இவரின் பங்களிப்பு முக்கியமானது. அரசியல், சமூகம், இலக்கியம், ஆன்மீகம் ஆகிய தலைப்புகளில் ஏராளமான நூல்களை எழுதியவர். இந்திய தேசியத்தையும், தமிழ்தேசியத்தையும் இரு வழிகளாகக் கொண்டவர். திராவிட அரசியலுக்கு எதிராக செயல்பட்டவர். பெரியார், திருக்குறள் மாநாடு நடத்திய போது, இவர் அதனை எதிர்த்து தமிழகம் முழுவதும் சிலப்பதிகாரம் மாநாட்டை நடத்தியவர். 1961ல் இவருடைய செங்கோல் இதழில் அரவாணிகள் படும் துன்பம் பற்றி தலையங்கம் எழுதியுள்ளார். இவர் தமிழரசு கழகம் என்ற கட்சியை நடத்திவந்தார் மூன்றாம் வகுப்பு மட்டுமே படித்த இவருக்கு பின்னாளில் டாக்டர் பட்டம் தேடிவந்தது. தமிழகமேலவையின் தலைவராக பணியாற்றி உள்ளார்.

**ம.பொ.சி. நூல்கள்**

**தன் வரலாறு**

1. எனது போராட்டம் 1974

**சிறுகதை**

வைகுந்தம் பிறந்தது
(சிறுகதைத் தொகுப்பு) - 1980

**பயண நூல்கள்**

1. மலேசியாவில் ஒரு மாதம் - 1965
2. மாஸ்கோவிலிருந்து லண்டன் வரை - 1972
3. மொரிசியஸ் தீவில் ஒரு வாரம் - 1987
4. அமெரிக்காவில் மூன்று வாரம் - 1987

**வாழ்க்கை வரலாறுகள்**

1. கப்பலோட்டிய தமிழன் - 1944
2. வீரபாண்டிய கட்டபொம்மன் - 1949
3. கயத்தாற்றில் கட்டபொம்மன் - 1950
4. தளபதி சிதம்பரனார் 1950
5. சுதந்திர வீரன் கட்டபொம்மன் - 1950
6. கப்பலோட்டிய சிதம்பரனார் (விரிவானபதிப்பு) - 1972
7. தோழர் சிங்காரவேலர் வீர வாழ்க்கை - 1985
8. நாடகப் பேராசிரியர் - சதாவதானி கிருஷ்ணசாமிப் பாவலர் வாழ்க்கை வரலாறு - 1988
9. முப்பெரும் ஞானியர் - 1989

**வள்ளலார் பற்றிய நூல்கள்**

1. வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு - 1963
2. வள்ளலாரும் பாரதியும் - 1965
3. வள்ளலார் வளர்த்த தமிழ் - 1966
4. வள்ளலார் வகுத்த வழி - 1970
5. வள்ளலார் கண்ட சாகாக் கலை - 1970
6. வானொலியில் வள்ளலார் - 1976
7. வள்ளலாரும் காந்தியடிகளும் - 1977
8. வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு (பள்ளிப் பதிப்பு) - 1978

**பாரதியார் பற்றிய நூல்கள்**

1. எங்கள் கவி பாரதி - 1953
2. பாரதியாரும் ஆங்கிலமும் - 1961
3. பாரதி கண்ட ஒருமைப்பாடு - 1962
4. [illegible] - 1966
5. பாரதியார் பாதையிலே - 1974
6. பாரதியார் போர்க்குரல் - 1979
7. பாரதியார் பற்றிய ம.பொ.சி. பேருரை - 1983

**காந்தியடிகள் பற்றிய நூல்கள்**

1. தமிழர் கண்ட காந்தி - 1949
2. காந்தியடிகளும் ஆங்கிலமும் - 1961
3. காந்தியடிகளும் சோசலிசமும் - 1971
4. மகாத்மாவும் மதுவிலக்கும் - 1979
5. காந்தியடிகளைச் சந்தித்தேன் - 1979
6. பயங்கரவாதமும் காந்திய சகாப்தமும் - 1994

**திருவள்ளுவர் பற்றிய நூல்கள்**

1. வள்ளுவர் வகுத்த வழி - 1952
2. திருவள்ளுவரும் கார்ல்மார்க்சும் - 1960

**கம்பர் பற்றிய நூல்கள்**

1. கம்பர் கவியின்பம் - 1966
2. கம்பரிடம் யான் கற்ற அரசியல் - 1979
3. கம்பரும் காந்தியடிகளும் - 1981
4. கம்பரின் சமயக் கொள்கை - 1983

**சிலப்பதிகாரம் பற்றிய நூல்கள்**

1. சிலப்பதிகாரமும் தமிழரும் - 1947
2. கண்ணகி வழிபாடு - 1950
3. இளங்கோவின் சிலம்பு - 1953
4. வீரக்கண்ணகி - 1958
5. நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் (உரை) - 1961
6. மாதவியின் மாண்பு - 1968
7. கோவலன் குற்றவாளியா? - 1971
8. சிலப்பதிகாரத் திறனாய்வு - 1973
9. சிலப்பதிகார யாத்திரை - 1977
10. சிலப்பதிகார ஆய்வுரை - 1979
11. சிலப்பதிகார உரையாசிரியர்கள் உரை - 1980
12. சிலப்பதிகாரத்தில் யாழும் இசையும் - 1990
13. [illegible]

**மாநில சுயாட்சிப் பிரசார நூல்கள்**

1. தமிழகத்தில் தமிழரசு - 1946
2. தமிழருக்குச் சுயநிர்ணயம் -1946
3. புதிய தமிழகம் - 1946
4. தமிழரும் பிரிட்டிஷ் திட்டமும் - 1946
5. தமிழரசுக் கழக முதலாவது மாநில மாநாட்டுத் தலைமையுரை - 1947
6. தமிழன் குரல் - 1947
7. சுயாட்சித் தமிழகம் - 1949
8. பிரிவினை வரலாறு - 1950
9. திராவிடத்தாரின் திருவிளையாடல்கள் - 1950
10. திராவிடர் கழகமே, வேங்கடத்திற்கு வெளியே போ - 1951
11. தமிழரசா திராவிடஸ்தானா? - 1952
12. தமிழரசுக் கழக இரண்டாவது மாநில மாநாட்டுத் தலைமை உரை - 1952
13. வடக்கெல்லைப் போர் - 1953
14. முரசு முழங்குகிறது - 1955
15. தி.மு.க.வின் கொள்கை மாற்றம் - 1957
16. சுயாட்சியா, பிரிவினையா? - 1959
17. மொழிச் சிக்கலும் மாநில சுயாட்சியும் - 1968
18. மாநில சுயாட்சிக் கிளர்ச்சியின்

* 1984 ஆம் ஆண்டு விடுதலைப்போரில் தமிழகம் என்ற நூல்மட்டும் நாட்டுடைமையாக்கப்பட்டது.

வரலாறு - *1973*

19. சட்ட மன்றத்தில் சுயாட்சிக் குரல் - *1974*
20. புதிய தமிழகம் படைத்த வரலாறு - *1986*

**மொழிச் சிந்தனைகள் பற்றிய நூல்கள்**

1. தமிழும் கலப்படமும் - *1960*
2. தமிழா? ஆங்கிலமா? - *1961*
3. இன்பத் தமிழா? இந்தி - ஆங்கிலமா? -*1963*
4. ஆங்கில ஆதிக்க எதிர்ப்பு வரலாறு - *1964*
5. தமிழை வளர்க்கக் கோரி அறிஞர்க்கு விண்ணப்பம் - *1976*
6. நாடகத் தமிழ் - *1976*
7. கல்வி மொழி தமிழா? ஆங்கிலமா? (ம.இரா. இளங்கோவன் தொகுத்தது) - *1981*
8. சென்னை பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாப் பேருரை - *1981*
9. ஆங்கிலம் வளர்த்த மூட நம்பிக்கை - *1982*
10. தமிழும் சமஸ்கிருதமும் - *1984*
11. ஆங்கில ஆதிக்கம் அகல பத்துக் கட்டளைகள் -

**விடுதலைப் போராட்டம் பற்றிய நூல்கள்**

1. சுதந்திரப் போரில் தமிழகம் - *1948*
2. முதல் முழக்கம் - *1968*
3. விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு - *1970*
4. காந்தியடிகளுக்கு முற்பட்ட காலத்தில் விடுதலைப் போர் - *1974*
5. வந்தேமாதரம் வரலாறு - *1977*
6. விடுதலைக்குப் பின் தமிழ் வளர்ந்த வரலாறு - *1978*
7. சுதந்திரப் போர்க்களம் - *1980*
8. விடுதலைப் போரில் தமிழகம் (2 தொகுதிகள்) - *1982*
9. இந்திய தேசியத்திற்கு ஒரு நூறு வயது - *1986*
10. வேதாரணியத்திலிருந்து டில்லி ராஜ்காட்வரை - *1988*

**இனவழி ஆராய்ச்சி நூல்கள்**

1. கலிங்கத்துப் பரணி திறனாய்வு - *1975*
2. தமிழகத்தில் பிறமொழியினர் - *1976*
3. இலக்கியங்களில் இன வளர்ச்சி - *1978*
4. வில்லிபாரதத்தில் தமிழுணர்ச்சி - *1981*
5. இலக்கியங்களில் இனவுணர்ச்சி - *1985*

**பேச்சுக்கலை பற்றிய நூல்கள்**

1. பேச்சுக்கலை - *1950*
2. மேடைப் பேச்சும் பொதுக்கூட்டமும் - *1951*

**கட்டுரை நூல்கள்**

1. ஏன் வேண்டும் எதிரணி - *1946*
2. ஆத்திரப் பொங்கல் - *1947*
3. கம்யூனிஸ்டுகள் முடிவை மாற்ற முயல்வார்களா? - *1947*
4. வானொலியில் ம.பொ.சி. - *1947*
5. மே தினப்புரட்சி - *1949*
6. சீர்திருத்தப் போலிகள் - *1950*
7. தமிழர் திருநாள் - *1951*
8. இலக்கியத்தின் எதிரிகள் - *1953*
9. இலக்கியச் செல்வம் - *1955*
10. ம.பொ.சி. கூறுகிறார் - *1955*
11. பொம்மன் புகழிலும் போட்டியா? - *1956*
12. கட்டுரைக் களஞ்சியம் - *1956*
13. இன்பத்தமிழகம் - *1956*
14. ம.பொ.சி. பேசுகிறார் (பர்மா சொற்பொழிவு) - *1956*
15. சிந்தனை அலைகள் - *1964*
16. இலக்கியத்தில் சோசலிசம் - *1965*
17. தமிழிசை வரலாறு - *1966*
18. ஔவை - யார்? - *1967*
19. சான்றோரின் சாதனைகள் - *1970*
20. ஆன்ம நேய ஒருமைப்பாடு - *1970*
21. திருக்குறளில் கலைபற்றிக் கூறாததேன்? - *1974*
22. தமிழிசை வாழ்க - *1978*
23. கல்வி நெறிக் காவலர் (திரு.நெ.து. சுந்தர வடிவேலு மணிவிழாச் சொற்பொழிவு) -*1974*
24. தொல்காப்பியரிலிருந்து பாரதியார் வரை - *1979*
25. ஆன்மீகமும் அரசியலும் - *1980*
26. நவபாரதத்தை நோக்கி - *1982*
27. சிலம்புச் செல்வரின் பல்கலைப் பேருரை - *1981*
28. இலக்கியங்களில் புத்திர சோகம்- *1986*
29. நானறிந்த ராஜாஜி - *1987*
30. இராமன் சீதாபிராட்டி வாக்குவாதம் - *1989*
31. எனது பார்வையில் நாமக்கல் கவிஞர் - *1989*
32. நேருஜி என் ஆசான் - *1989*
33. தமிழர் திருமணம் - *1990*
34. எனது பார்வையில் பாவேந்தர் - *1991*
35. ஈழத் தமிழரும் நானும் - *1992*
36. எம்.ஜி.ஆருடன் எனக்கிருந்த தொடர்பு - *1995*
37. எழுத்துச் சீர்திருத்தம் - *1995*

**பதிப்பித்த நூல்**

1. ஔவையார் அருளிச்செய்த கல்வியொழுக்கம் மூலமும் திரு.ஜி.எஸ். அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பும் - *1980*

# 1990



(1891-1964)

## புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

இளமையில் பக்திக் கவிஞராக மலர்ந்து, தேசியக் கவிஞராக வளர்ந்து, சுயமரியாதை இயக்கத்தின் புரட்சிக் கவிஞராக முதிர்ந்து, மனித நேயக் கவிஞராக நிறைவு பெற்றவர். தமிழ் வளர்ச்சி, பெண் விடுதலை, சமுதாய சீர்திருத்தம், மடமை ஒழிப்பு, பொருளாதாரச் சமத்துவம் ஆகிய குறிக்கோள்களுக்குத் தம் எழுத்துகளால், ஓயாமல் குரல் கொடுத்தவர். 1929ஆம் ஆண்டிலேயே கருத்தடை பற்றிய சிந்தனைகளைக் கவிதையில் வடித்தவர். நல்ல குடும்பத்தைப் பல்கலைக் கழகம் என்றவர். தமிழால் பாரதிதாசனும், பாரதிதாசனால் தமிழும் பெருமை பெற்றன என்பது நாடறிந்த உண்மை.

**பாரதிதாசன் பாடல்கள் காலவரிசை**

1. 1920 மயிலம் ஸ்ரீ ஷண்முகன் வண்ணப்பாட்டு
2. 1925 மயிலம் ஸ்ரீ சிவசண்முகக் கடவுள் பஞ்சரத்நம்
3. 1926 மயிலம் சுப்பிரமணியர் துதியமுது
4. 1930 கதர் இராட்டினப்பாட்டு
5. 1930 சிறுவர் சிறுமியர் தேசியகீதம்
6. 1930 தொண்டர் படைப்பாட்டு
7. 1930 தாழ்த்தப்பட்டோர் சமத்துவப்பாட்டு
8. 1930 சஞ்சீவி பர்வதத்தின் சாரல்
9. 1931 சுயமரியாதைச் சுடர்
10. 1937 புரட்சிக்கவி
11. 1938 பாரதிதாசன் கவிதைகள்
12. 1941 எதிர்பாராத முத்தம்
13. 1942 குடும்ப விளக்கு
14. 1942 இசையமுது
15. 1944 இருண்ட வீடு
16. 1944 அழகின் சிரிப்பு
17. 1944 காதல் நினைவுகள்
18. 1944 குடும்ப விளக்கு (இரண்டாம் பகுதி) - விருந்தோம்பல்
19. 1944 பாண்டியன் பரிசு
20. 1945 தமிழியக்கம்
21. 1948 முல்லைக்காடு
22. 1948 காதலா? கடமையா?
23. 1948 இந்தி எதிர்ப்புப் பாட்டு
24. 1948 கடல் மேற் குமிழிகள்
25. 1948 குடும்ப விளக்கு மூன்றாம் பிரிவு, (திருமணம்)
26. 1948 அகத்தியன் விட்ட புதுக்கரடி (ஒரே தொகுப்பில்)
27. 1948 நல்ல முத்துக் கவிதை (ஒரே தொகுப்பில்)
28. 1948 திராவிடர் திருப்பாடல் (ஒரே தொகுப்பில்)
29. 1949 ஏற்றப்பாட்டு
30. 1949 பாரதிதாசன் கவிதைகள், இரண்டாம் பகுதி
31. 1949 தமிழச்சியின் கத்தி
32. 1949 பாரதிதாசன் ஆத்திச் சூடி
33. 1949 திராவிடர் புரட்சித் திருமணத் திட்டம்
34. 1950 குடும்ப விளக்கு (நான்காம் பிரிவு - மக்கட்பேறு)
35. 1950 குடும்ப விளக்கு (ஐந்தாம் பிரிவு - முதியோர் காதல்)
36. 1951 அமிழ்து எது?
37. 1952 பாரதிதாசன் கவிதைகள், இரண்டாம் தொகுதி (இரண்டாம் பதிப்பு)
38. 1952 இசையமுது - இரண்டாம் பகுதி
39. 1954 பொங்கல் வாழ்த்துக் குவியல்
40. 1955 பாரதிதாசன் கவிதைகள் - (மூன்றாம் தொகுதி)
41. 1956 தேனருவி
42. 1958 இளைஞர் இலக்கியம்
43. 1959 குறிஞ்சித் திட்டு
44. 1962 கண்ணகி (புரட்சிக் காப்பியம்)
45. 1962 மணிமேகலை வெண்பா
46. 1964 பாரதிதாசன் பன்மணித்திரள்
47. 1977 காதல் பாடல்கள்
48. 1977 குயில் பாடல்கள்
49. 1977 பாரதிதாசன் கவிதைகள், (நான்காம் தொகுதி)
50. 1978 தேனருவி (38 பாடல்கள்)
51. 1978 ஒரு தாயின் உள்ளம் மகிழ்கிறது
52. 1978 தமிழுக்கு அமுதென்று பேர்
53. 1978 புகழ் மலர்கள்
54. 1978 நாள் மலர்கள்
55. 1978 வேங்கையே எழுக
56. 1980 பாரதிதாசன் ஆத்தி சூடி + பொங்கல் வாழ்த்துக்குவியல் + இளையோர் ஆத்தி சூடி
57. 1982 பாரதிதாசன் கவிதைகள் (நான்கு தொகுதிகள் + புதிய பாடல்கள் 17)

**பாடுபொருள் அடிப்படையில் (பூம்புகார் பதிப்பகம்) பகுத்தும், தொகுத்தும் வெளியிட்டவை**

1. 1992 பாரதிதாசன் கவிதைகள் - உயர்ந்தோர் (+ ஒரு புதிய பாடல்)
2. 1992 இயற்கை
3. 1992 தமிழ் (+ ஒரு புதிய பாடல்)
4. 1992 சிறுகாப்பியங்கள்
5. 1992 இளைஞர் இலக்கியம் 1
6. 1992 சமுதாயம் (+ இரண்டு புதிய பாடல்கள்)
7. 1994 இளைஞர் இலக்கியம் 2
8. 1994 பொங்கல் வாழ்த்து இலக்கியம் (+ ஆறு புதிய பாடல்கள்)
9. 1994 காதல்(+இரண்டு புதிய பாடல்கள்)

**குறிப்பிடத்தக்க பிற தொகுப்புகள்**

1. 1993 பாரதிதாசன் கவிதைகள் (பாவேந்தர் பாடல்களின் முழுத் தொகுப்பு), ஆ. திருவாசகன், சுரதா கல்லாடன் (தொ.ஆ.)
2. 1994 உலகம் உன் உயிர் (தலையங்க கவிதைகள் (+ நான்கு புதிய கவிதைகள்), ச.சு. இளங்கோ (ப.ஆ.)
3. 1995 பாரதிதாசன் வண்ணப்பாடல்கள் (+ நான்கு புதிய பாடல்கள்) ய. மணிகண்டன், (தொ.ப.)
4. 2000 பாரதிதாசன் திரைப்பாடல்கள், வாமனன் (தொ.ஆ.) பிறர் படைப்புகளுடன் பாரதிதாசன் கவிதைகளும் சேர்க்கப்பட்டு வெளிவந்த நூல்கள்
5. 1937 இந்தி எதிர்ப்புப் பாடல்கள், குடிஅரசுப் பதிப்பகம், ஈரோடு
6. 1945 எது இசை? கமலா பிரசுராலயம், சென்னை
7. 1946 தன்மானத் தாலாட்டு, ஸ்ரீ இலக்ஷ்மி நூல் பதிப்பகம், திருவத்திபுரம் வ.ஆ.
8. 1948 மகாகவி பாரதியார், ஞாயிறு நூற் பதிப்பகம், புதுச்சேரி

இவற்றில் இடம் பெற்ற பாரதிதாசன் பாடல்கள் வேறு கவிதைத் தொகுப்புகளில் சேர்க்கப்பெற்றுள்ளன.
முன்னர் வேறு நூல்களில் இடம்பெற்ற பாடல்களே தெரிவு செய்து தொகுக்கப்பட்டு வேறு பெயரில் வெளிவந்த நூல்கள்

1. 1942 காதற்பாட்டு
2. 1958 தாயின்மேல் ஆணை
3. 1993 தமிழ் உணர்ச்சி

இத்தகைய தொகுப்பு நூல்கள் பல வெளிவந்துள்ளன.

**பாரதிதாசன் நாடகங்கள் காலவரிசை**

**நூல் வடிவில் வெளி வந்தவை**

1. 1939 இரணியன் அல்லது இணையற்ற வீரன்
2. 1944 நல்ல தீர்ப்பு
3. 1944 கற்கண்டு
4. 1944 பொறுமை கடலினும் பெரிது (ஒரே தொகுப்பில்)
5. 1946 அமைதி
6. 1947 சௌமியன்
7. 1948 படித்த பெண்கள்
8. 1949 சேரதாண்டவம்
9. 1950 இன்பக்கடல் (ஒரே தொகுப்பில்)
10. 1950 சத்திமுத்தப் புலவர் (ஒரே தொகுப்பில்)
11. 1951 கழைக்கூத்தியின் காதல்
12. 1959 பாரதிதாசனின் நாடகங்கள்

(அ.) கற்கண்டு
(ஆ.) பொறுமை கடலினும் பெரிது
(இ.) இன்பக்கடல்
(ஈ.) சத்திமுத்தப் புலவர்

13. 1967 பிசிராந்தையார்
14. 1978 தலைமலை கண்ட தேவர்

(அ.) தலைமலைகண்ட தேவர்
(ஆ.) கழைக் கூத்தியின் காதல் (1951)
(இ.) குடும்ப விளக்கும் குண்டுக்கல்லும்
(ஈ.) ஆரிய பத்தினி மாரிஷை
(உ.) ரஸ்புடீன்
(ஊ.) அம்மைச்சி
(எ.) வஞ்சவிழா
(ஏ.) விகடக் கோர்ட்

15. 1980 கோயில் இரு கோணங்கள்

(அ.) கோயில் இரு கோணங்கள்
(ஆ.) சமணமும் சைவமும்
(இ.) மூளை வைத்தியம்
(ஈ.) குலத்தில் குரங்கு
(உ.) மருத்துவர் வீட்டில் அமைச்சர்
(ஊ.) ஆரிய பத்தினி மாரிஷை (தலைமலை கண்ட தேவர் நூலிலும்)
(எ.) முத்துப் பையன் (குழந்தை நாடகம்)
(ஏ.) மேனி கொப்பளித்ததோ?

16. 1992 குமர குருபரர் நாடகம் (1944 - திரைப்படத்திற்காக எழுதியது)
17. **1994 பாரதிதாசனின் புதிய நாடகங்கள்**

(க.) அச்சு வடிவம் பெறாமலிருந்த நாடகங்கள்

(அ.) இசைக்கலை ( யசோதர காவியம்)
(ஆ.) பறவைக்கூடு I & II (சைகோன் பின்னணி)
(இ.) மக்கள் சொத்து (கதை வடிவினது)

(உ.) நூல் வடிவம் பெறாமலிருந்த நாடகங்கள்

(அ.) ஐயர் வாக்குப் பலித்தது
(ஆ.) கொய்யாக்கனிகள் (கவிதை நாடகம் - முற்றுப் பெறாதது)
(இ.) சங்கீத வித்வானோடு
(ஈ.) ஆக்கம்.
(உ.) வினை

18. 2003 போர்க்காதல்

(அ.) போர்க்காதல்
(ஆ.) கொய்யாக்கனிகள் (முற்றுப் பெற்றது)
(இ.) படித்த பெண்கள்
(ஈ.) ஆனந்த சாகரம்

2. நாடகப் பாங்கின காவியம் சிறு காப்பியம் எனும் தலைப்புகளில் தொகுதிகளில் இடம் பெற்றவை

19. 1937 புரட்சிக்கவி (1944 - சிறு மாற்றங்களுடன் நாடகமாக நடத்தப்பெற்றது)
20. வீரத்தாய் (1935 - நெட்டப்பாக்கம் பள்ளி ஆண்டு விழாவில் மாணவர்கள் நடிப்பதற்கு முதலில் நாடகமாக எழுதப்பட்டது. 1938 பாவேந்தரின் மூத்த மகள் வீரத்தாயாகவும் மகன் சுதர்மனாகவும் நடிக்க நடத்தப்பெற்றது.
21. 1949 ஒன்பது சுவை
22. 1949 போர் மறவன்
23. 1949 காதல் வாழ்வு

V. பெயரளவில் நாடகம் எனக் குறிக்கப்பெற்றவை - நாடக வடிவில் நூல்களாக வெளிவராதவை

1. தமிழச்சியின் கத்தி (1937)
2. பாண்டியன் பரிசு (1940)
3. கருஞ்சிறுத்தை (1949)

**பாரதிதாசனின் பிற உரைநடை ஆக்கங்கள்**

**I. கட்டுரைகள்**

1. 1980 வந்தவர் மொழியா? செந்தமிழ்ச் செல்வமா? (சொல்லாய்வுகள்)
2. 1980 பாட்டுக்கு இலக்கணம்
3. 1983 மானுடம் போற்று
4. 1992 பாரதியாரோடு பத்தாண்டுகள் (+ பொழிவுகள், கவிதைகள்)
5. 1994 உலகுக்கோர், ஐந்தொழுக்கம் (தலையங்கக் கட்டுரைகள்)
6. 1996 இலக்கியக் கோலங்கள்(பாடல் விளக்கக் குறிப்புகள், செய்திகள்)

**II. உரை**

1. 1992 பாரதிதாசன் திருக்குறள் உரை: டாக்டர் ச.சு. இளங்கோ (ஆ.ப.)
2. 1994 பாவேந்தர் பார்வையில் வள்ளுவம் - திருக்குறள் உரை: முனைவர் நா. செங்கமலத்தாயார் (தொ.ஆ.)

**III. புனை கதைகள்**

1. 1955 பாரதிதாசன் கவிதைகள் (கட்டுரைகள், கிண்டல் துணுக்குகள்)
2. 1980 ஏழைகள் சிரிக்கிறார்கள் (நீக்கம் + புதிய கதைகள்) ச.சு. இளங்கோ (தொ.ஆ.)
3. 1994 பாரதிதாசன் சிறுகதைகள் (நீக்கம் + புதிய கதைகள்) மு. சாயபுமரைக்காயர் (தொ.ஆ.)
4. 1994 பாரதிதாசன் புதினங்கள்

அ. அன்னை
ஆ. விஞ்ஞானி
இ. அனைவரும் உறவினர்
ஈ. பக்த ஜெயதேவர்
உ. குமரகுருபரர்
ஊ. எதிர்பாராத முத்தம்
எ. [illegible]
ஏ. ஏழை உழவன் (அல்லது) முகுந்த சந்திரிகை
ஐ. ஆலஞ்சாலையும் வேலஞ்சேரியும்

**IV. கிண்டல் துணுக்குகள்**

1981 சிரிக்கும் சிந்தனைகள்

**V. வினாவிடைகள்**

1981 கேட்டலும் கிளத்தலும்

**VI. திரைக்கதை உரையாடல்கள்**

1. 1940 காளமேகம்
2. 1945 ஆயிரம் தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி
3. 1946 சுபத்ரா
4. 1947 சுலோசனா
5. 1950 பொன்முடி
6. 1952 வளையாபதி
7. 1964 மகாகவி பாரதியார் வரலாறு

**சொற்பொழிவுகள்**

1. 1947 கவிஞர் பேசுகிறார்
2. 1950 முத்தமிழ் + (பிறர் பொழிவுகள்)
3. 1954 தமிழ் இன்பம்
4. 1980 பாரதிதாசன் பேசுகிறார் + (புதிய பொழிவுகள்)

# 1995



1901-1969

## அறிஞர் அண்ணா

அறிஞர் அண்ணா அவர்கள் தமிழக அரசியல் வரலாற்றில் திருப்புமுனை ஏற்படுத்தியவர். திரையுலகில் திருப்பு முனையை உண்டாக்கியவர். தமிழ்நாட்டு மக்களின் மனமாசுகளை அகற்ற வேண்டும், மறுமலர்ச்சியினைத் தோற்றுவிக்க வேண்டும் என்ற எண்ணங்களோடு தன் இலக்கியப் பணியைச் செய்தவர். சொக்க வைக்கும் எழுத்து நடையால் கதை, கட்டுரை, புதினம், நாடகம் எனப் பல துறைகளிலும் முத்திரை பதித்தவர். பேனா முனையின் வலிமையை நிரூபித்த எழுத்துத் தளபதி.

**அண்ணாவின் நூல்கள்**

1953
1. இலட்சிய வரலாறு

1968
2. குமரிக் கோட்டம்,

1969
3. தமிழரின் மறுமலர்ச்சி, பாரி நிலையம், சென்னை,

1970
4. பணத்தோட்டம்,

1971
5. அண்ணாவின் நாடகங்கள், பரிமளம் பதிப்பகம், சென்னை,

1973
6. சிறுகதைகள்

1974
7. நாம்

1974
8. கலிங்கராணி

1975
9. 1858-1948, (வெளியீடு)

1976
10. மேதினம்

1977
11. நிலையும் நினைப்பும்,

1978
12. கற்பனைச் சித்திரம்

1978
13. பெரியார் ஒரு சகாப்தம்

1980
14. வேலைக்காரி
15. வண்டிக்காரன் மகன்
16. கண்ணாயிரத்தின் உலகம்
17. இன்ப ஒளி
18. அண்ணாவின் கவிதைகள்
19. பிடி சாம்பல்,

1981
20. வெள்ளை மாளிகையில், பூம்புகார் பிரசுரம்,

1981
21. இரும்பாரம்,

1982
22. ரோமாபுரி ராணிகள்,

1986
23. அப்போதே சொன்னேன்
24. பவழ பஸ்பம்
25. தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் (I-XI) - பாரி நிலையம், சென்னை

1987
26. அரசாண்ட ஆண்டி

1997
27. ஆரிய மாயை, கார்த்திகா பதிப்பகம், சென்னை
28. அறிஞர் அண்ணா சிறுகதைகள், பூர்ணிமா பதிப்பகம், சென்னை

1998
29. சந்திரமோகன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை
30. நீதி தேவன் மயக்கம்,
31. சட்டசபை சொற்பொழிவுகள்

**சிறுகதைகள் / மற்றபடைப்புகள்**

1. கன்னி விதவையான கதை
2. செவ்வாழை
3. இரு பரம்பரைகள்
4. செங்கரும்பு
5. மழை
6. கனவான்
7. அறுவடை
8. அல்லாடும் ஆண்டவன்
9. பித்தளையல்ல பொன்னேதான்
10. யார் கேட்க முடியும்
11. இரும்பாரம்
12. நீதிதேவன் மயக்கம்
13. சந்திரோதயம்
14. சந்திரமோகன் (சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்)
15. வேலைக்காரி
16. சொர்க்கவாசல்
17. இன்பஒளி
18. பாவையின் பயணம்
19. பிடி சாம்பல் (ஒளியூரில் தஞ்சை வீழ்ச்சி)
20. வண்டிக்காரன் மகன்
21. கோமளத்தின் கோபம்
22. கபோதிபுரக் காதல்
23. நீதிபதி வக்கீலானார்
24. அப்போதே சொன்னேன் திருமலை கண்ட திவ்யஜோதி
25. மக்கள் தீர்ப்பு
26. பவழ பஸ்பம்
27. குமாஸ்தாவின் பெண்
28. கடைசிக் கனவு
29. கண்ணாயிரத்தின் உலகம்
30. தசாவதாரம்
31. கலிங்கராணி
32. இரும்பு முள்வேலி (இதயம் இரும்பானால், இரத்தம் பொங்கிய இருபது ஆண்டுகள்)
33. அரசாண்ட ஆண்டு
34. என்வாழ்வு
36. உடன்பிறந்தார் இருவர்
37. பழமும் பயனும்
38. அண்ணாவின் கவிதைகள்
39. உலகப்பெரியார் காந்தி
40. தேவலீலைகள்
41. இன்பத் திராவிடம்
42. ஆரிய மாயை
43. புன்னகை
44. பாரதம்
45. திரும்பிப்பார்
46. ஆடிய பாதம்
47. துரோகி கப்லான்
48. கட்டை விரல்
49. பார்வதி B.A
50. ஓர் இரவு
51. ரங்கோன் ராதா
52. மாஜிக் கடவுள்கள்
53. அண்ணாவின் சொற்செல்வம்
54. கைதி எண் 6342
55. சமத்துவப்புரட்சி
56. சொல்லும் பயனும்
57. உச்சவரம்பா? மிச்சவரம்பா?
58. நடிப்புக் கலைச்செல்வம்
59. மொழிப்போர்
60. காதல்ஜோதி
61. தம்பிக்கு கடிதங்கள் (1-12 தொகுப்புகள் - திராவிட நாட்டில் வெளிவந்தவை)
62. தம்பிக்கு கடிதங்கள்

(1-9 தொகுப்புகள் - காஞ்சி இதழில் வெளிவந்தவை)
63. ரோமாபுரி ராணிகள்
64. கடவுள் தண்டிப்பார்
65. தீ பரவட்டும்
66. நாடும் ஏடும்
67. நிலையும் நினைப்பும்
68. திராவிட தேசியம்
69. ஏ தாழ்ந்த தமிழகமே!
70. தமிழரின் மறுமலர்ச்சி
71. சட்டசபை சொற்பொழிவுகள் (தொகுப்பு - I, II, III)
72. எட்டு நாட்கள்
73. அந்திக் கலம்பகம்
74. மக்கள் கரமும் மன்னன் சிரமும்
75. அண்ணாமலைப் பேருரை
76. சமூகசேவகி சாருபாலா
77. நண்பர்கள் கேட்பதற்கு
78. வர்ணாஸ்ரமம்
79. கம்பரசம்
80. தோழமையா? விரோதமா?
81. அண்ணாவின் சொற்பொழிவுகள்
82. இராச்சிய சபையில் அண்ணா
83. கம்பரசம் I,II
84. புராணங்கள் போதை தரும் லேகியம் (புராண மதங்கள்)
85. இலட்சிய வரலாறு
86. கடவுளின் லீலைகள்
87. சொல்லும் பயனும்
88. நல்ல தீர்ப்பு
89. உண்ணாவிரதம் ஓர் தண்டனை
90. நாக்கிபுந்தார்
91. கைக்கு எட்டியது
92. சரோஜா ஆறணா
93. ஜஸ்டின் ஜானகி
94. 1938-40 ஓர் வசீகர வரலாறு
95. பொய் லாப நஷ்டம்
96. முகம் வெளுத்தது
97. கலி தீர்த்த பெருமாள்
98. மாடிவீடு
99. இரு காட்சிகள்
100. வெள்ளிரதம்
101. மூலகாரணம்
102. புதிய நாயனார்
103. மனிதமந்தை
104. யோகாப்பியாசம்
105. போலீஸ் பொன்னுசாமி
106. தவசிகள் காதை
107. அப்போதே சொன்னேன்
108. தொழில் கிடைத்தது

**ஓரங்க நாடகங்கள்**

109. ரோம் எரிகிறது
110. கலப்பு மணம்
111. ஆற்றங்கரையினிலே
112. பாப்புலர் ஸ்டோர்ஸ்
113. ஆலை ஆறுமுகம்
114. நடந்ததுதான் நடக்கிறது
115. கரை போகவில்லை
116. காசூரான் கருணை
117. மடமான்மீயம்
118. பாஜிராவ்
119. மகுடாபிஷேகம்
120. அவர்கள் உள்ளம்
121. 1942-48
122. எத்தன் திருவிளையாடல்
123. தர்மம் தலைகாக்கும்
124. குறும்புக்காரன்
125. அவர்கள் பேசாதது
126. ஒரே ஒரு வித்யாசம்
127. கண்ணீர்த் துளி
128. பாகீரதியின் பந்தயம்
129. கைலாயம் வேண்டாம்
130. முதலாளித்துவ சோஷியலிசம்
131. அம்பாள் கடாட்சம்
132. மங்களாபுரி மைனர்
133. செல்வ இளைஞர்
134. நல்லதம்பி
135. ஆற்றோரம் (சொற்பொழிவு)
136. நாடும் ஏடும்
137. 1858-1948 (கட்டுரைகள்)



138. பணத்தோட்டம் (கட்டுரைகள்)
139. அறப்போர் (கட்டுரைகள்)
140. விதைக்காது விளையும்(கட்டுரைகள்)
141. பொன்னொளி (கட்டுரைகள்)
142. இருள் அகல (கட்டுரைகள்)
143. நாட்டின் நாயகர்கள் (கட்டுரைகள்)
144. எல்லோரும் இந்நாட்டு மன்னர் (கட்டுர்ரைகள்)
145. திராவிடர் நிலை (கட்டுரைகள்)
146. பெரியாரின் பெரும் படையில் சேரவாரீர் (கட்டுரைகள்)
147. கழனியாச்சே (கட்டுரைகள்)
148. ஜமீன் இனாம் ஒழிப்பு (கட்டுரைகள்)
149. மூலபலம் முறிகிறது (கட்டுரைகள்)
150. குடியாட்சி கோமான்கள் (கட்டுரைகள்)
151. நாம் (கட்டுரைகள்)
152. விடுதலைப்போர் (கட்டுரைகள்)
153. VERDICT ON VERDICT (கட்டுரைகள்)
154. திராவிட நாடு கட்டுரைகள் (1942 முதல் 1963 வரை)
155. சிந்தனை விருந்து (கட்டுரைகள்)
156. அதிர்ச்சி வைத்யம் (கட்டுரைகள்)
157. செக்கோஸ்லோவகியா (கட்டுரைகள்)
158. இதன் விலை ரூபாய் மூவாயிரம் (கட்டுரைகள்)
159. நமது முழக்கம் (கட்டுரைகள்)
160. போராட்டம் (கட்டுரைகள்)
161. Peoples Poet
162. Moscow Mob parade
163. Anna speks - Rajya Sabha
164. Radio talks of Anna falicitation adresses
165. Home Land
166. Home Rule
167. Yale University - Speeches

# 1995



1930-1959

## பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்

பாட்டுக்கு ஒரு பட்டுக்கோட்டை என்று புகழ் பெற்ற பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பிறப்பிடம் பட்டுக்கோட்டை அருகில் உள்ள சங்கம் படைத்தான் காடு என்னும் சிற்றூர். எளிய விவசாய குடும்பத்தைச் சேர்ந்த அருணாசலம், சிவாலாட்சி தம்பதியரின் இளைய மகன். 19 வயதில் கவி புனைவதில் அதிகம் ஆர்வம் காட்டியவர்.

தம்முடைய இளம் வயதில் கம்யூனிஸ்ட் கட்சி சார்ந்த விவசாய சங்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். தஞ்சையைச் சேர்ந்த வீரத் தியாகிகள் சிவராமன், இரணியன் ஆகியோருடன் சேர்ந்து விவசாய இயக்கத்தைக் கட்டி வளர்ப்பதில் தீவிரமாகப் பங்கெடுத்தார். தமது வாழ்வில் விவசாயியாக, மாடு மேய்ப்பவராக, மாட்டு வியாபாரியாக, மாம்பழ வியாபாரியாக, இட்லி வியாபாரியாக, முறுக்கு வியாபாரியாக, தேங்காய் வியாபரியாக, கீற்று வியாபரியாக, மீன் நண்டு பிடிக்கும் தொழிலாளியாக, உப்பளத் தொழிலாளியாக மிஷின் டிரைவராக, தண்ணீர் வண்டிக்காரராக, பாடகராக, நடிகராக, நடனக்காரராக, கவிஞராக என்று தன் சுயவாழ்விற்காக பல வேலைகளைச் செய்தவர்.

இவருடைய பல பாடல்கள் ஜனசக்தி இதழில் வெளிவந்தது. 1955ம் ஆண்டு படித்த பெண் திரைப்படத்திற்காக முதல் பாடலை இயற்றி அந்தத் துறையில் அழுத்தமான முத்திரையைப் பதித்தார். இவருடைய பாடல்கள் மண் சார்ந்தவை. மேலும் பாடல்களில் உருவகங்களைக் காட்டாமல் உணர்ச்சிகளைக் காட்டியவர். இருபத்தி ஐந்து வயதில் திரைப்படத்துறையில் பாடல் எழுத ஆரம்பித்த இவர் இருபத்தி ஒன்பதாம் வயதில் காலமானார். இவர் காலமான வருடத்தில்தான் மகன் குமரவேல் பிறந்தார். தமிழ், பண்பாட்டு வரலாற்றை எழுதும்போது பட்டுக்கோட்டையைத் தவிர்க்க முடியாது.இவருடைய அனைத்துப் பாடல்களும் நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளன.



# 1996



1902-1981

## தேவநேயப் பாவாணர்

தனித் தமிழ் இயக்கத்தின் தந்தைகளில் ஒருவர். பன்மொழிப் புலமையர். சொல்லாய்வில் ஒப்பாரும், மிக்காரும் இல்லாத அளவில் திகழ்ந்தவர். தாமே இயக்கமாகத் திகழ்ந்து உலகத் தமிழ்க் கழகம் என்னும் இயக்கத்தை உருவாக்கியவர். பன்முகச் சிந்தனையாளர். தம்காலத்தும், தம் காலத்திற்குப் பின்னாலும் சொல்லாய்வு அறிஞர்கள் உருவாகி வழி வழியாகச் சிறக்க வழி காட்டியவர். சொற்பிறப்பியல் அகர முதலியை உருவாக்குவதற்குப் பாடுபட்டவர்.

**பாவாணர் நூல்கள்**

1. சிறுவர் பாடல் திரட்டு *1925*
2. மருதநிலப் பாடல் *1925*
3. கிறிஸ்தவக் கீர்த்தனம் *1932*
4. துவாரகை மன்னன் (அ) பூபாரந்தீர்த்த புண்ணியன் *1932*
5. கட்டாய இந்திக் கல்விக் கண்டனம் (அ) செந்தமிழ்க் காஞ்சி *1937*
6. கட்டுரைக் கசடறை என்னும் வியாச விளக்கம் *1937*
7. கட்டுரை வரைவியல் *1939*
8. தமிழன் எப்படிக் கெட்டான்? *1940*
9. தமிழர் சரித்திரச் சுருக்கம் *1940*
10. வேர்ச் சொற் சுவடி *1940*
11. இயற்றமிழ் இலக்கணம் *1940*
12. ஒப்பியல் மொழி நூல் *1940*
13. சுட்டுவிளக்கம் (அ) அடிப்படை வேர்ச்சொல் ஐந்து *1943*
14. திராவிடத்தாய் *1944*
15. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் குறிப்புரை *1944*
16. தொல்காப்பியம் சொல்லதிகாரம் குறிப்புரை *1946*
17. சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் *1949*
18. வேர் சொற் கட்டுரைகள் *1949*
19. உயர்தரக் கட்டுரை இலக்கணம் I *1950*
20. உயர்தரக் கட்டுரை இலக்கணம் II *1951*
21. பழந்தமிழாட்சி *1952*
22. கட்டுரை வரைவியல் *1952*
23. முதல் தாய்மொழி *1953*
24. தமிழ் நாட்டு விளையாட்டுகள் *1954*
25. தமிழர் திருமணம் *1956*
26. சென்னைப் பல்கலைக்கழக அகராதியின் சீர்கேடு *1961*
27. சென்னைப் பல்கலைக்கழக அகராதியின் சீர்கேடு (ஆங்கிலம்) *1961*
28. என் அண்ணாமலை நகர் வாழ்க்கை *1962*
29. இசைத்தமிழ்க் கலம்பகம் *1966*
30. பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் *1966*
31. The Primary Classical Language of the world 1966
32. தமிழர் வரலாறு - 1 *1967*
33. வடமொழி இலக்கிய வரலாறு *1967*
34. The Language Problem of Tamilnadu - 1966

35. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? 1968
36. இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும்? (ஆங்கிலம்) 1968
37. வண்ணனை மொழி நூலின் வழுவியல் 1968
38. தமிழ் கடன் கொண்டு தழைக்குமா? 1969
39. திருக்குறள் தமிழ் மரபுரை 1969
40. இசையரங்கு இன்னிசைக் கோவை 1969
41. தமிழர் வரலாறு II 1972
42. தமிழர் மதம் 1972
43. மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கட்டுடைமை 1978
44. தமிழின் தலைமையை நாட்டும் தனிச் சொற்கள் 1979
45. தமிழ் இலக்கியவரலாறு 1979

பாவாணர் மறைவுக்குப் பின்

46. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி முதன் மடலம் 1985
47. பாவாணர் கடிதங்கள் 1985
48. பாவாணர் மடல்கள் 2000
49. பாவாணர் பாடல்கள் 2001

பாவாணர் இயற்றி நமக்குக் கிட்டாதவை

50. பழமொழி பதின் மூவாயிரம் (சேலத்தில் வாழ்ந்த காலம்)
51. சொல்லியல் நெறிமுறை (அண்ணாமலை நகரக் காலம்)
52. இசைத் தமிழ் வரலாறு. (மன்னார்குடிக் காலம்)



# 1997



(1876-1950)

## மறைமலை அடிகள்

தனித்தமிழ் இயக்கத்தின் முன்னோடித் தலைவர்களில் ஒருவரான இவரின் இயற்பெயர் வேதாசலம். இவரின் பெற்றோர் சொக்கநாதர், சின்னம்மையார். திருக்கழுக்குன்றத்தில் பிறந்தவர். இவருக்கு நான்கு சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் உண்டு. நாகப்பட்டினத்தில் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது தந்தையாரின் மறைவால் படிப்பைத் தொடரமுடியாமல் நாராயணசாமி பிள்ளை என்பவரிடம் தமிழ் கற்றார். தனித்தமிழ்ப் பற்று காரணமாக 1916-ல் மறைமலை என்று தம் பெயரை மாற்றிக் கொண்டார். இவர் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளை நன்கு கற்றவர்.

சைவசித்தாந்த சண்டமாருதம் என்று அழைக்கப்பட்ட சோமசுந்தர நாயக்கரிடம் சைவ சித்தாந்தத்தைக் கற்றார். சென்னைக்கு வந்தபின் கிறிஸ்துவக் கல்லூரியில் வி.கோ. சூரியநாராயண சாஸ்திரி (பரிதிமாற்கலைஞர்)யுடன் தமிழாசிரியராகப் பணிபுரிந்தார். சென்னை பல்லாவரத்தில் சைவசித்தாந்த மகா சமாஜம் என்ற அமைப்பைத் தோற்றுவித்தார். திருமுருகன் என்ற அச்சுக்கூடத்தை உருவாக்கி பல நூல்களை வெளியிட்டார். மணி மொழி நூல் நிலையம் என்ற நூல்நிலையத்தையும் உருவாக்கினார். கம்யூனிஸ்ட் தலைவரான ப. ஜீவானந்தம் இவரின் தனித்தமிழ் இயக்கத்தில் இணைந்து, மக்களுக்கான மொழியாக தனித் தமிழ் இயக்கம் இல்லை என்பதால் விலகிய நிகழ்ச்சி மறைமலை அடிகள் வாழ்க்கையில் நடந்த ஒரு முக்கியமான பண்பாட்டு விமர்சன வரலாறாகும்.

மருத்துவம்

1. மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை (இரு தொகுதிகள்) 1933
2. பொருந்தும் உணவும் பொருந்தா உணவும் 1921

மறைபொருளியல்

3. மனித வசியம்: மனக்கவர்ச்சி: 1927
4. யோக நித்திரை: அறிதுயில் 1922
5. தொலைவில் உணர்தல் 1935
6. மரணத்தின் பின் மனிதர் நிலை: 1911

இலக்கியம்

7. சாகுந்தல நாடகம் 1907 (சமஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்த்தது)
8. சாகுந்தல நாடக ஆராய்ச்சி 1934

இதழ்கள்

9. ஞானசாகரம் மாதிகை 1902
10. ORIENTAL MYSTIC MYNA (Bimonthly) 1908 - 1909
11. OCEAN OF WISDOM 1935

சங்க இலக்கிய ஆய்வு

12. ANCIENT & MODERN TAMIL POETS 1937
13. முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர் 1936
14. முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை 1903
15. பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை 1906

16. முதற்குறள் வாத நிராகணம் 1989
17. திருக்குறள் ஆராய்ச்சி 1951

பாடல்
18. முனிமொழிப் பிரகாசிகை 1899
19. மறைமலையடிகள் பாமணிக்கோவை 1977

நாடகம்
20. அம்பிகாபதி அமராவதி 1954

புதினம்
21. கோகிலாம்பாள் கடிதங்கள் 1921
22. குமுதவல்லி: நாகநாட்டரசி 1911

கடிதம்
23. மறைமலையடிகளார் கடிதங்கள் 1957

கட்டுரை
24. அறிவுரைக் கொத்து 1921
25. அறிவுரைக் கோவை 1971
26. உரைமணிக் கோவை 1972
27. கருத்தோவியம் 1976
28. சிந்தனைக் கட்டுரைகள் 1908
29. சிறுவர்க்கான செந்தமிழ் 1934
30. இளைஞர்க்கான இன்றமிழ் 1957

சமயம்
31. திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை 1900
32. மாணிக்கவாசகர் மாட்சி 1935
33. மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் (இரு தொகுதி) 1930
34. மாணிக்கவாசகர் வரலாறு 1952
35. சோமசுந்தரக் காஞ்சியாக்கம் 1901
36. சோமசுந்தர நாயகர் வரலாறு 1957
37. கடவுள் நிலைக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா 1968
38. திருவாசக விரிவுரை 1940

தத்துவம்
39. சித்தாந்த ஞானபேதம், சதமணிக் கோவை - குறிப்புரை 1898
40. துகளறு போதம் - உரை 1898
41. வேதாந்த மத விசாரம் 1899
42. வேத சிவாகமப் பிரமாண்யம் 1900
43. Saiva Siddanta as a Philosophy of Practical knowledge 1940
44. சைவ சித்தாந்த ஞான போதம் 1906
45. சிவஞான போத ஆராய்ச்சி 1958

வரலாறு
46. Can hindi be a lingua franca of india 1969
47. இந்தி பொது மொழியா? 1937

சமூக இயல்
48. சாதி வேற்றுமையும் போலிச் சைவரும் 1913
49. Tamilian and aryan form of marriage 1936
50. தமிழ்நாட்டவரும் மேல் நாட்டவரும் 1936
51. பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம் 1938
52. வேளாளர் நாகரிகம் 1923
53. தமிழர் மதம் 1941
54. பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் 1906



# 1998



(1883-1953)

## திரு.வி. கல்யாணசுந்தரம்

திருவாரூரைச் சேர்ந்த இவர் தனது இளமைக்காலத்தில் காங்கிரஸ் கட்சியில் பணியாற்றியவர். பிற்காலத்தில் தொழிற்சங்கத் தலைவராக இருந்தார். நவசக்தி நாளிதழின் ஆசிரியராகப் பணியாற்றினார். பெண்ணின் பெருமை உட்பட பல நூல்களை எழுதியவர். கம்யூனிஸ்ட் தலைவர் ம. சிங்காரவேலரோடு இணைந்து தொழிற்சங்கப் பணிகளில் ஈடுபட்டவர்.

**தி.ரு.வி.க. நூல்கள்**
1. திரு.வி.க வாழ்க்கைக் குறிப்புகள்
2. பெரியபுராணம் அரும்பொருள்
3. சன்மார்க்க போதமும் திறவும்
4. தமிழ்ச் சொல் (அ) கட்டுரைத்திரட்டு (முதற் பகுதி)
5. தமிழ்ச் சொல் (அ) கட்டுரைத் திரட்டு (இரண்டாம் பகுதி)
6. திருக்குறள் விரிவுரை (முதற்பகுதி) பாயிரம்
7. திருக்குறள் விரிவுரை (இரண்டாம்பகுதி)
8. மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்
9. பெண்ணின் பெருமை (அ) வாழ்க்கைத் துணை
10. இந்தியாவும் விடுதலையும்
11. தேசபக்தாமிர்தம்
12. உள்ளொளி
13. தமிழ்த்தென்றல் (அ) தலைமைப் பொழிவு
14. பரம்பொருள் (அ) வாழ்க்கை வழி
15. இருமையும் ஒருமையும்
16. நாயன்மார் வரலாறு
17. தமிழ் நூல்களில் பௌத்தம்
18. முருகன் (அ) அழகு
19. இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்
20. சீர்திருத்தம் (அ) இளமை விருந்து
21. முடியா? காதலா? சீர்திருத்தமா?
22. என் கடன் பணிசெய்து கிடப்பதே.
23. சைவத்தின் சமரசம்
24 சைவத்திறவு
25. தமிழ்நாடும் நம்மாழ்வாரும்
26. முதுமை உளறல்
27. இமயமலை (அ) தியானம்
28. காரைக்கால் அம்மையார் திருமுறை அரும்பதக்குறிப்பு
29. ஆலமும் அமுதும்
30. கடவுள் காட்சியும் தாயுமானாரும்
31. சித்த மார்க்கம்
32. உரிமை வேட்கை (அ) நாட்டுப்பாடல்
33. பொதுமை வேட்டல்
34. முருகன் அருள் வேட்டல்
35. திருமால் அருள் வேட்டல்
36. சிவனருள் வேட்டல்
37. கிறிஸ்துவின் அருள் வேட்டல்
38. புதுமை வேட்டல்
39. கிறிஸ்து மொழிக்குறள்
40. இருளில் ஒளி
41. நாயன்மார் திறம்
42. சமரச தீபம்
43. நினைப்பவர் மனம்
44. சைவசமய சாரம்
45. அருகன் அருகே (அ) விடுதலை வழி
46. பொருளும் அருளும் (அ) மார்க்ஸியமும் காந்தியமும்
47. சித்தந் திருத்தல் (அ) செத்துப்பிறத்தல்
48. வளர்ச்சியும் வாழ்வும் (அ) படுக்கைப் பிதற்றல்
49. திருமந்திரம்

# 1998



(1899-1954)

## கல்கி

'கல்கி' என்ற புனைப்பெயர் கொண்ட ரா.கிருஷ்ணமூர்த்தி தமிழ் உரைநடையில் நகைச்சுவையையும், வரலாற்று நிகழ்ச்சிகளின் மீது ஆவலையும் தூண்டிவிட்ட எழுத்தாளர்; தமிழ்த் தென்றல் திரு.வி.க.விடம் பாடம் பயின்று, மூதறிஞர் ராஜாஜியிடம் பண்பட்டு, 'ஆனந்த விகட'னில் அனுபவம் பெற்று, பிறகு 'கல்கி'யின் வாயிலாகப் பத்திரிகை உலகில் தனி முத்திரை பதித்தவர்; நாட்டு விடுதலைப் போரில் முனைப்புடன் ஈடுபட்டு மூன்று முறை சிறை சென்றவர்; படிப்பவர்கள் அனைவரையும் கவர்ந்திழுக்கும் எழுத்தாற்றலுக்குச் சொந்தக்காரர். கல்கி என்ற ஆளுமையின் பல்வேறு பரிமாணங்களை எளிய முறையில் அறிமுகம் செய்யும் நோக்கில் எழுதப்பட்டுள்ள நூல்களும் வெளி வந்துள்ளன.

**கல்கியின் நூல்கள்**

**சிறுகதை**

1. அபலையின் கண்ணீர். பாரதி பதிப்பகம், ஐந்தாம் பதிப்பு 1962
2. அமர வாழ்வு. வானதி பதிப்பகம், எட்டாம் பதிப்பு 1997
3. ஒற்றை ரோஜா. வானதி பதிப்பகம், ஐந்தாம் பதிப்பு 1997
4. கணையாழியின் கனவு. ஐயம் கம்பெனியார், இரண்டாம் பதிப்பு 1974
5. திருவழுந்தூர் சிவக்கொழுந்து. வானதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1994
6. பாங்கர் விநாயக ராவ். வானதி பதிப்பகம், முதல் பதிப்பு 1996
7. புன்னை வனத்துப் புலி. பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1960
8. மயில்விழி மான், வானதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 1997
9. மயிலைக் காளை. வானதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1989
10. மாடத்தேவன் சுனை. வானதி பதிப்பகம், ஆறாம் பதிப்பு 1993
11. வீணை பவானி. வானதி பதிப்பகம், எட்டாம் பதிப்பு 1994
12. ஜமீன்தார் மகன். வானதி பதிப்பகம், ஏழும் பதிப்பு 1988.

**நாவல்**

1. அரும்பு அம்புகள். அலமு நிலையம், முதற்பதிப்பு 1998.
2. அலை ஓசை. வானதி பதிப்பகம், எட்டாம் பதிப்பு 1998
3. கள்வனின் காதலி. வானதி பதிப்பகம், நான்காம் பதிப்பு 1998
4. சிவகாமியின் சபதம். மணிவாசகர் பதிப்பகம், முதற் பதிப்பு 1998.
5. சோலைமலை இளவரசி. வானதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 1994
6. தியாக பூமி. வானதி பதிப்பகம், நான்காம் பதிப்பு 1997
7. தேவகியின் கணவன். பாரதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 1955
8. மகுடபதி. வானதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 1989.
9. பார்த்திபன் கனவு. வானதி பதிக்கம், ஏழாம் பதிப்பு 1997
10. பொய்மான் கரடு. வானதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1997.
11. பொன்னியின் செல்வன் (5 பாகங்கள்). மணிவாசகர் பதிப்பகம். முதற்பதிப்பு 1998
12. மோகினித் தீவு. வானதி பதிப்பகம், ஒன்பதாம் பதிப்பு 1977.

**கட்டுரை**

1. இசை விருந்து. பாரதி பதிப்பகம். முதற்பதிப்பு 1957.
2. ஏட்டிக்குப் போட்டி. வானதி பதிப்பகம். பத்தாம் பதிப்பு 1997.
3. ஓ! மாம்பழமே! வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1995.
4. கண்கொள்ளாக் காட்சிகள். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1998.
5. கண்ணீரால் காத்த பயிர். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1999.
6. கலைச் செல்வம். பாரதி பதிப்பகம், முதற்பதிப்பு 1957.
7. குமரியும் குன்றமும். பாரதி பதிப்பகம், முதற்பதிப்பு 1956.
8. சங்கீத யோகம். தமிழ்ப் பண்ணை, முதற்பதிப்பு 1947.
9. திருமகளும் கலைமகளும். பாரதி பதிப்பகம், முதற்பதிப்பு 1998.
10. பாரதி பிறந்தார். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1995.
11. மகாத்மாவும் மகாகவியும். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1995.
12. மூன்று மாதம் கடுங்காவல். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1999.

**நடைச்சித்திரம்**

1. யார் இந்த மனிதர்கள்? வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1998.

**வாழ்க்கை வரலாறு**

1. நாட்டுக்கு ஒரு புதல்வர். பாரதி பதிப்பகம், முதற்பதிப்பு 1953.
2. மாந்தருக்குள் ஒரு தெய்வம் (இரு பாகங்கள்). வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1991.

**பயண இலக்கியம்**

1. இலங்கையில் ஒரு வாரம். பாரதி பதிப்பகம், மூன்றாம் பதிப்பு 1963.
2. இலங்கைப் பிரயாணம். பாரதி பதிப்பகம். 1954.
3. தாகூர் தரிசனம். பாரதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1956.
4. தெய்வ தரிசனம். பாரதி பதிப்பகம், முதற்பதிப்பு 1957.
5. நம் தந்தையர் செய்த விந்தைகள். வானதி பதிப்பகம், முதற்பதிப்பு 1998.
6. ஸ்வப்ன லோகம். வானதி பதிப்பகம், இரண்டாம் பதிப்பு 1989.

**மொழிபெயர்ப்பு**

1. சத்திய சோதனை (இரு பாகங்கள்). நாகப்பட்டினம்: இமயப் பதிப்பகம், முதற்பதிப்பு 1999.
2. நமது தாய்நாடு. நாகப்பட்டினம்: இமயப் பதிப்பகம், முதற்பதிப்பு 1999.
3. யுவ பாரதம் அல்லது இந்திய தேசிய இயக்கத்தின் வரலாறு. நாகப்பட்டினம்: இமயப் பதிப்பகம், முதற்பதிப்பு 1999.

**கல்கியின் புனைப்பெயர்கள்**

தாம் எழுத எடுத்துக் கொள்ளும் பொருளுக்கு ஏற்புடைய வகையில் புனைப்பெயரைச் சூட்டிக் கொள்ளும் போக்கு கல்கியிடம் காணப்பட்டது. அவர் அவ்வப்போது தமக்குச் சூட்டிக் கொண்ட புனைப்பெயர்களின் பட்டியல்:

- அகஸ்தியர்
- ஒரு தமிழன்
- ஒரு தறிகாரர்
- ஒரு பிராமண இளைஞன்
- கர்நாடகம்
- கல்கி
- சென்னைவாசி
- கிராமவாசி
- குகன்
- தமிழ்த்தேனீ
- தமிழ்த்தும்பி
- தும்பி
- தமிழ்மகன்
- தேனீ
- துதிக்கையான்
- பிரகஸ்பதி
- பரிசோதகர்
- பெற்றோன்
- பூரண சுதந்திரம்
- யமன்
- முகமூடி
- லாங்கூலன் (வாலன்)
- ரா.கி.
- விகடன்
- வழிப்போக்கன்
- விவசாயி
- விசிறி

# 1998



(1876-1954)

## கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் சொற்பொழிவுகளும், உரைநடைகளும் 'கவிமணியின் உரைமணிகள்' என நூல் வடிவம் பெற்றன. உமர்கய்யாம், ஆசியஜோதி ஆகியன இவரது மொழிபெயர்ப்புப் பாடல்கள். நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம் எனும் பழமைவாதத்துக்கு எதிராக கவிதை பூண்டவர் கவிமணி. கவிதைக்கு இலக்கணம் சொன்னவர் கவிமணி...

**கவிமணி நூல்கள்**

1. மலரும் மாலையும்
2. மருமக்கள் வழி மான்மியம்
3. ஆசிய ஜோதி
4. உமர் கய்யாம்
5. கவிமணியின் உரைமணிகள்
6. தேவியின் கீர்த்தனங்கள்
7. காந்தளூர்ச் சாலை முதலான ஆங்கில தமிழ்க் கட்டுரைகள்



# 1998



(1906-1963)

## ப. ஜீவானந்தம்

எல்லோராலும் ஜீவா என்று அழைக்கப்படும் ப.ஜீவானந்தம் ஏறத்தாழ நாற்பது ஆண்டுகளுக்கு மேல் பொது வாழ்க்கையில் ஈடுபட்டவர். காந்தியவாதியாக, சுயமரியாதை இயக்க வீரராக, தனித் தமிழ்ப் பற்றாளராக, பொதுவுடமை இயக்கத் தலைவர் என்று படிப்படியாக உயர்ந்தவர். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் மற்றும் இறுதியில் சைவம் சார்ந்த பிரிவினர் புலமைத் தளத்தில் விரிவாக செயல்பட்டனர். இந்தச் சூழலை நீதிக்கட்சியின் செயல்பாடுகளுக்கும் சைவத்திற்குமான உறவுமுறையாகப் புரிந்து கொள்ள முடியும். பேச்சு மரபை முதன்மைப்படுத்தி அடுக்குத் தொடர் மொழி சார்ந்த அரசியல் சொல்லாடல் உச்சம் பெற்றிருந்த காலத்தில் ஜீவாவின் மேடைப் பேச்சு உணர்ச்சிகரமாகப் பாமரர்களின் அரசியலையும் சோவியத் கலை இலக்கிய பாரம்பரியத்தையும் பேசியது. திராவிட இயக்கம் இராமாயணக்கதை சார்ந்த பண்பாட்டை விமர்சனம் செய்து, எரிக்க முற்பட்ட போது இதற்கு மாற்றாக ஜீவா இராமாயணத்தை காப்பியமாகப் புரிந்து கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டவர். ஆளும் வர்க்க மனநிலை கொண்ட காங்கிரஸ்காரர்கள் புரிந்து கொண்ட கம்பனுக்கும் திராவிட இயக்கம் புரிந்து கொண்ட கம்பனுக்கும், பொதுவுடமை இயக்கம் சார்ந்து செயல்பட்ட ஜீவா புரிந்து கொண்ட கம்பனுக்கும் பாரிய வேறுபாடுகள் உண்டு. இலக்கியத்தில் ஜீவா எதார்த்தவாதத்தை முதன்மைப்படுத்தினார். தமிழ்வழிக் கல்வி, தமிழ் ஆட்சி மொழி குறித்த விரிவான உரையாடலை சட்டமன்ற உறுப்பினராக இருந்த போது நிகழ்த்திக் காட்டியவர். பாரதியின் பாடல்களைத் தெருவெல்லாம் பாடி மக்கள் இயக்கமாக மாற்றியவர். சமதர்மம், அறிவு, ஜனசக்தி, தாமரை போன்ற இதழ்களின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றவர். கலை இலக்கியப் பெருமன்றம் என்ற பண்பாட்டு செயல்பாட்டிற்கான இயக்கத்தை உருவாக்கியவர்களில் ஒருவர்.

**ஜீவாவின் நூல்கள்**

1. ஜீவாவின் பாடல்கள்
2. பாரதி வழி
3. புதுமைப் பெண்
4. கலையும் இலக்கியமும்
5. இலக்கியச் சுவை
6. மதமும் மனிதவாழ்வும்
7. மொழியைப்பற்றி ஜீவா
8. இலக்கியத்தில் சோஷலிஸ்ட் எதார்த்த வாதம்
9. சங்க இலக்கியத்தில் சமுதாயக் காட்சிகள்
10. பாரதியைப் பற்றி ஜீவா
11. சோஷலிச தத்துவங்கள்
12. மதமும் மனித வாழ்வும்
13. சோஷலிஸ்ட் தத்துவங்கள்
14. ஜீவாவின் பாடல்கள் (தொகுப்பு)
15. மேடையில் ஜீவா (தொகுப்பு)
16. சோவியத் இலக்கியம் பற்றி ஜீவா.
17. தேசத்தின் சொத்து (தொகுப்பு)

# 1998



(1888-1972)

## நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

'பலே பாண்டியா! பிள்ளை! நீர் ஒரு புலவன் ஐயமில்லை!' என்று பாரதியாரால் பாராட்டப்பட்ட நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை ஒரு காந்தியக் கவிஞர். உவமையழகும் உணர்ச்சியோடு இணைந்த சந்த அழகும் அமைந்த பாடல்களைத் தந்தவர். தமிழினப் பெருமையை, பண்பாட்டைப் பரப்பியவர். ஆயினும் மொழி வெறிக்கு அப்பாற்பட்டவர் என்று வகைப்படுத்தலாம். 'கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமொன்று வருகுது' என்ற இவரது வழிநடைப் பாடல் 1930ல் நடந்த உப்பு சத்தியாக்கிரக போராட்டத்தில் நாடெங்கும் ஒலித்தது. ஆனந்த விகடனில் இவர் எழுதிய நொண்டிச்சிந்து வெளிவந்த இதழ் அன்றைய காலத்தில் மற்ற வாரங்களைக் காட்டிலும் 5000 பிரதிகள் அதிகம் விற்றதாகத் தெரிகிறது என்று எழுதுகிறார் திரு.வி.க. தேசபக்தி உணர்வை எழுப்பும் இவரது பாடல்களைப் பண்டிதர்களும், பாமரர்களும் பாடினர்.

**நாமக்கல் கவிஞரின் நூல்கள்**

**கவிதைத் தொகுப்புகள்**

1. தேசபக்திப் பாடல்கள், தமிழ்ப்பண்ணை, சென்னை, 1938
2. பிரார்த்தனை, தமிழ்ப்பண்ணை, சென்னை, 1938.
3. தமிழன் இதயம், தமிழ்ப்பண்ணை, சென்னை, 1938
4. காந்தி அஞ்சலி, கவிஞர் பதிப்பகம், கோவை, 1951.
5. சங்கொலி, தமிழ்ப் புத்தகப் பண்ணை, சென்னை, 1953.
6. கவிதாஞ்சலி, கவிஞர் பதிப்பகம், கோயமுத்தூர், 1953.
7. மலர்ந்த பூக்கள், கவிஞர் பதிப்பகம், கோயமுத்தூர், 1953.
8. தமிழ் மணம், ராமன் பதிப்பகம், சென்னை.
9. தமிழ்த்தேன், இன்பநிலையம், சென்னை, 1953.
10. நாமக்கல் கவிஞர் பாடல்கள், லிப்கோ, சென்னை. 1960.

**சிறு காப்பியங்கள்**

11. அவளும் அவனும், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. 1954
12. அன்பு செய்த அற்புதம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. 1957
13. காந்தி சரித்திர நொண்டிச் சிந்து (நாமக்கல் கவிஞர் பாடல்கள் என்ற நூலில் அடங்கியது.)
14. விடுதலைக்கு விதை விதைத்த வீரர் கூட்டம்,பழநியப்பா பிரதர்ஸ், சென்னை.1960
15. நாட்டுக்கும்மி.

**புதினங்கள்**

16. மலைக்கள்ளன், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. 1942.
17. தாமரைக்கண்ணி, கவிஞர் பதிப்பகம், கோவை, 1966.
18. கற்பகவல்லி, கவிஞர் பதிப்பகம், கோவை, 1962
19. மரகதவல்லி, கவிஞர் பதிப்பகம், கோவை, 1962
20. காதல் திருமணம், கவிஞர் பதிப்பகம், கோவை, 1962

**நாடகங்கள்**

21. அரவணைசுந்தரம், வாசன் பதிப்பகம், நாமக்கல் 1940
22. மாமன் மகள், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. 1954

**கட்டுரைகள்**

23. தமிழ்மொழியும், தமிழ் அரசும், இன்ப நிலையம், சென்னை. 1956
24. இசைத்தமிழ் இன்பநிலையம், சென்னை. 1965
25. தாயார் கொடுத்த தனம், ஜெயம் அண்டு கம்பெனி, சென்னை. 1953
26. கவிஞன் குரல், தமிழ்ப் புத்தகப் பண்ணை, சென்னை. 1958
27. கலையின்பம், கவிஞன் பதிப்பகம், கோவை. 1958.
28. தமிழன் கண்ட அரசு, பாரதி பதிப்பகம், சென்னை.
29. தேமதுரத் தமிழோசை, கவிஞர் பதிப்பகம், கோவை, 1957
30. சங்கிலிக் குறவன், ராமன் பதிப்பகம், சென்னை.
31. ஆரியராவது, திராவிடராவது தமிழ்ப்பண்ணை, சென்னை. 1948
32. பார்ப்பான் சூழ்ச்சியார், விநோதன் அச்சகம், சென்னை. 1948

**மொழிபெயர்ப்புகள்**

33. காந்திய அரசியல் (எஸ்.என். அகர்வால் எழுதிய ஆங்கில நூலின் தமிழாக்கம்) தமிழ்ப் புத்தகப் பண்ணை, சென்னை. 1953.
34. பஜகோவிந்தம் (சங்கரரின் வடமொழி நூலின் தமிழாக்கம்) (செய்யுள் வடிவில்) நாமக்கல் கவிஞர் பாடல்கள் எனும் நூலில் இடம்பெற்றுள்ளது.
35. சாங்கியயோகம் (பகவத்கீதையில் உள்ள ஓர் இயலின் தமிழாக்கம்) நாமக்கல் கவிஞர் பாடல்கள் எனும் நூலில் இடம்பெற்றுள்ளது.
36. வாக்குமூலம் (காந்திஜி மொழிந்தது) நாமக்கல் கவிஞர் பாடல்கள் எனும் நூலில் இடம்பெற்றுள்ளது.

**இலக்கியத் திறனாய்வு**

37. இலக்கிய இன்பம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை. 1950
38. திருவள்ளுவரும் பரிமேலழகரும், இன்பநிலையம், சென்னை. 1956
39. திருவள்ளுவர் திடுக்கிடுவார், இன்பநிலையம், சென்னை. 1954
40. வள்ளுவரின் உள்ளம், இன்பநிலையம், சென்னை. 1956
41. திருவள்ளுவரின் உள்ளம், இன்பநிலையம், சென்னை. 1956
42. கம்பரும் வால்மீகியும், இன்பநிலையம், சென்னை. 1956
43. காந்தியடிகளும், கம்ப நாட்டாழ்வாரும், கவிஞர் பதிப்பகம், கோவை. 1964

**சரிதைகளும், சுயசரிதைகளும்**

44. தேசபக்தர் மூவர், இன்பநிலையம், சென்னை. 1953
45. என் கதை, தமிழ்ப் பண்ணை, சென்னை. 1944
46. என் கதை (சுருக்கம்) தமிழ்ப் பண்ணை, சென்னை. 1941

**விரிவுரை**

47. தேசபக்தர் மூவர், இன்பநிலையம், சென்னை. 1953

**இசைநூல்கள்**

48. கீர்த்தனைகள், தமிழ்ப் பண்ணை, சென்னை.
49. காந்தி பஜனைத் திரட்டு, தமிழ் வேதபாராயண சபா, சென்னை. 1949

**புதினம்**

50. ஜெயமே ஜெயம் -

# 1998



(1872-1936)

## வ.உ. சிதம்பரனார்

இந்திய அரசியலில் நாம் தலைவணங்கி ஏற்றுக் கொள்ளக்கூடிய முக்கியமான தலைவர். இந்திய விடுதலைப் போரில் தமிழகத்தில் மக்கள் தலைவராகவும், தொழிற்சங்கத் தலைவராகவும் பணியாற்றியவர். 'பொது மக்கள் கருத்து' என்ற ஒன்றை அரசியல் சார்ந்து உருவாக்குதல் நிகழ்த்திக் காட்டிய சாதனை. மேடைப்பேச்சு என்பது ஒரு கலையாக, துறையாக ஆற்றல் மிக்கப் படைக்கலனாக பின்னாளில் தழைந்தோங்க புதுப்பாதை வகுத்தவர். இவர் கப்பல் ஓட்டியதும், செக்கிழுத்ததும் இந்திய சுதந்திரப் போராட்டத்திற்காக அவர் பட்ட துன்பங்களும், அதனால் அவரது குடும்பம் பட்ட சிரமங்களும் ஏராளம். ஆனால் இவருக்கு இந்திய தேசிய காங்கிரசில் எந்தப் பெரிய பதவியும் கொடுக்கப்படவில்லை. எந்தவிதமான தியாகமும் செய்யாமல் இவரின் சமகாலத்தவரான ராஜாஜி மிகப் பெரிய பதவிகளைப் பெற்றார் என்பது நகை முரண். நேர்மையான தொண்டனுக்கு எவ்விதமான அங்கீகாரமும் இல்லாமல் நேர்மையில்லாத தொண்டனுக்கு மிகப் பெரிய பதவியும் வந்ததையும் இதன் மூலம் உணரமுடியும். அரசியல் சீர்கேடு இங்கிருந்து தொடங்கியது எனலாம்.

**வ.உ.சி.யின் நூல்கள்**

1. மனம் போல வாழ்வு *1909*
2. அகமே புறம் *1914*
3. மெய்யறம் *1914*
4. மெய்யறிவு *1915*
5. பாடல் திரட்டு *1915*
6. வலிமைக்கு மார்க்கம் *1916*
7. இன்னிலை (பதிப்பு) *1917*
8. திருக்குறள் - அறத்துப்பால் - மணக்குடவர் உரை (பதிப்பு) *1917*
9. எனது அரசியல் பெருஞ்சொல் *1927*
10. தொல்காப்பியம் - இளம்பூரணம் - பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்) - இரண்டாம் பதிப்பு - *1928*
11. தொல்காப்பியம் - இளம்பூரணம் - எழுத்ததிகாரம் (பதிப்பு) *1928*
12. சாந்திக்கு மார்க்கம் *1934*
13. சிவஞான போதம் *1935*
14. திருக்குறள் - அறத்துப்பால் - வ.உ.சி. உரை *1935*
15. தொல்காப்பியம் - இளம்பூரணம் - பொருளதிகாரம் (ஒன்பது இயல்களும் அடங்கியது) - எஸ். வையாபுரிப்பிள்ளையுடன் இணைந்து பதிப்பித்தது *1936*
16. சுயசரிதை *1946*
17. வ.உ.சி. கண்ட பாரதி *1946*

**வ.உ.சி.யின் கட்டுரைகள்**

1. 'கடவுளும் பக்தியும்', விவேகபாநு (குற்றாலம்), செப்டம்பர் *1900*
2. 'விதி அல்லது ஊழ்', மேலது, அக்டோபர் *1900*
3. 'ஈசை', மேலது, டிசம்பர் *1900*
4. 'கடவுள் ஒருவரே', மேலது, பிப்ரவரி *1901*,
5. 'சுதேசாபிமானம்', விவேகபாநு (மதுரை), பிப்ரவரி *1906*
6. 'சுதேச ஸ்டீமர் விக்ஞாபனம்', மேலது, நவம்பர் *1906*
7. 'மனிதனும் அறிவும்', ஞானபாநு, ஏப்ரல் *1913*
8. 'மனமும் உடம்பும்', மேலது, மே *1913*
9. 'வினையும் விதியும்', மேலது, ஜூன் *1913*
10. 'தமிழ் எழுத்துக்கள்', மேலது, செப்டம்பர் *1915*
11. 'தமிழ்', சுதேசமித்திரன், *1915*
12. 'தமிழ் நூல்கள்', சுதேசமித்திரன் (வருஷ அனுபந்தம்), *1918*
13. 'திருவள்ளுவர் திருக்குறள்', தமிழ்ப்பொழில், *1929-31*.
14. 'திலக மகரிஷியின் வரலாறு', வீரகேசரி (ஞாயிறுதோறும் வெளிவந்த தொடர்), கொழும்பு, *1933-34*
15. 'கடவுளைக் காண்டல்' ஊழியன் ஜனவரி *1934*
16. 'சிவஞான போத ஆறாம்சூத்திர ஆராய்ச்சி' தினமணி (நாளிதழ்) *6.12.1935*
17. 'உலகமும் கடவுளும்' தினமணி (நாளிதழ்) *17.1.1936*

# 1998



## ஏ.எஸ்.கே. அய்யங்கார்

இவரின் இயற்பெயர் கிருஷ்ணமாச்சாரி. இவர் பள்ளியில் படிக்கும் போது நிறைய கிருஷ்ணமாச்சாரிகள் இருந்ததால் ஏ.எஸ்.கே. அய்யங்காராகி விட்டார். ம. சிங்காரவேலர், எஸ்.வி.காட்டே போன்றவர்களின் தொடர்பால் கம்யூனிஸ்டானவர். கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவாவின் தொடர்பால் தமிழ் மொழியைக் கற்று, தமிழ் மொழிக்கு பங்களிப்பு செய்தவர். தேச விடுதலைப் போராட்டங்களிலும் தொழிற்சங்கப் போராட்டங்களிலும் ஈடுபட்டவர். சென்னை துறைமுகத் தொழிலாளர்களுக்காக அமைத்துக் கொடுத்த தொழிற்சங்கங்கள், கூட்டுறவு பண்டகசாலை, பயிற்சிபள்ளிகள் இவரது பெயரை இன்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றன. கடைசிவரையிலும் பிரம்மசாரியாக வாழ்ந்தவர்.

**ஏ.எஸ்.கே நூல்கள்** :
பகுத்தறிவின் சிகரம்
பெரியார்
ஈ.வெ.ரா,
தங்கம்மா,
கம்யூனிசம்,
ரஷ்யா,
அம்பேத்கர் வாழ்க்கையும்
தாழ்த்தப்பட்ட மக்கள்
பிரச்சனையும்
கடவுள் கற்பனையே.



# 1998



(1889-1951)

## வ. ராமசாமி அய்யங்கார் (வ.ரா)

வ.ரா.என்று எல்லோராலும் அழைக்கப்பட்ட வ.ராமசாமியை திராவிட இயக்கத் தலைவர்களில் ஒருவரான சி.என் அண்ணாதுரை 'அக்கிரஹாரத்தின் அதிசய மனிதர்' என்று குறிப்பிடுவார். தஞ்சை மாவட்டம் திருவையாறுக்கு பக்கத்தில் உள்ள திங்களூரைச் சேர்ந்தவர். இவரின் பெற்றோர் வரதராஜ அய்யங்கார் பொன்னம்மாள் தம்பதியினர். இவர் பாரதியின் பெருமைகளைப் பரப்புவதைக் கடமையாகக் கொண்டவர். புதுவையில் தங்கி இருந்த போது பாரதியின் நட்பு கிடைத்தது. அந்த நட்பின் அனுபவமே பின்னாளில் மகாகவி பாரதியார் வாழ்க்கை வரலாற்று நூலாக வந்தது. பங்கிம் சந்தர சட்டர்ஜியின் எழுத்துகளை வங்காளத்திலிருந்து தமிழுக்கு மொழி பெயர்த்தார். தீண்டாமை ஒழிப்பு, பெண்கள் முன்னேற்றம், விதவைத் திருமணம், பெண்கல்வி போன்ற கருத்துகளை புதினங்களில் எழுதியவர். 1914 ஆம் ஆண்டிலிருந்து பத்திரிகைப் பணியில் ஈடுபட்டார். தஞ்சையிலிருந்து வெளிவந்த சுதந்திரன் பத்திரிகைக்கு ஆசிரியரானார். பிறகு வர்த்தகமித்திரன், பிரபஞ்சமித்திரன், தமிழ்நாடு, சுயராஜ்யா, வீரகேசரி, பாரததேவி என்று பல பத்திரிகைகளில் பணியாற்றினார். வ.ரா.வின் வாழ்க்கையில் பெரிய திருப்பம் என்பது மணிக்கொடி பத்திரிகையில் சேர்ந்ததுதான் என்று சில ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இளம் எழுத்தாளர்களை ஊக்குவித்தார். அந்த வகையில் கல்கி, புதுமைப்பித்தன் போன்றவர்களைக் கூறலாம். கல்கியின் முதல் புதினமான விமலாவை சுதந்திரன் பத்திரிகையில் வெளியிட்டார். வ.ரா. வைதீக வைஷ்ணவக் குடும்பத்தில் பிறந்தவர். தன் குல ஆசார அனுஷ்டானங்களைத் துறந்தவர். பூணூல் குடுமி இல்லை. பெற்றோர், உற்றார், சகோதரர் ஆகிய உறவுகளையும் துறந்தார். இலங்கையில் ஒரு பத்திரிகையில் பணியாற்றும் போது புவனேஸ்வரி அம்மையாரை மணந்து கொண்டார். இவர் எழுதியவை நான்கு புதினங்கள். ஐந்து வாழ்க்கை வரலாற்று நூல்கள், இரண்டு மொழி பெயர்ப்பு நூல்கள் ஆகும்.

**வ.ரா. நூல்கள்**

- சுவர்க்கத்தில் சம்பாஷணை
- கற்றது குற்றமா
- மழையும் புயலும்
- வசந்த காலம்
- வாழ்க்கை விநோதங்கள்
- சின்ன சாம்பு
- சுந்தரி
- கலையும் கலை வளர்ச்சியும்
- வ.ரா. வாசகம்
- விஜயம்
- ஞானவல்லி
- மகாகவி பாரதியார் வாழ்க்கைச் சித்திரம்

# 1998



(1879-1959)

## நாவலர் சோமசுந்தர பாரதியார்

எட்டயபுரத்தைச் சேர்ந்தவர். பெரும் பொருள் ஈட்டுவதற்கு வாய்ப்பாக அமைந்த வழக்கறிஞர் தொழிலை பெரிதும் நாடாமல் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டவர். தமிழ் முறைப்படி திருமணம் செய்து கொண்டவர். மதுரை தமிழ்ச் சங்கத்தின் செயலாளராக 1932-1933ல் பொறுப்பு வகித்தவர். தமிழில் நிறைய ஆய்வுகளைச் செய்தவர். பீமகவி என்பவருக்கும் பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியாருக்குமிடையே கருத்து வேறுபாடு இருந்தது. பீமகவி சொற்பொழிவில் குற்றங்கள் உள்ளன என்பதை வித்தியாபானு இதழில் பண்டிதமணி எழுதினார். இதைக் கண்டு பீமகவி வழக்குத் தொடர்ந்தார். பண்டிதமணிக்கு ஆதரவாக வழக்கில் வாதாடி வெற்றி பெற்றார் நாவலர் சோமசுந்தர பாரதியார். காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகும் போது, 'காங்கிரசில் எந்த கொள்கையை விரும்பி நான் சேர்ந்தேனோ, அந்த கொள்கைகள் இப்போது மாறத்தொடங்கி விட்டன' என்று கூறினார். காந்தியாருக்கும் இவருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. தொல்காப்பிய பொருளதிகாரத்திற்கு மூன்று இயல்களுக்கு புதிய உரை எழுதினார். பேராசிரியராக பணியாற்றியவர். நுட்பமான ஆராய்ச்சியாளர். சிறந்த உரையாசிரியர் என்று புகழ் பெற்றவர். 1944ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் உள்ள ஈழநாட்டு புலவர் மன்றம் நாவலர் என்ற பட்டத்தை இவருக்கு வழங்கியது.

**நாவலர் சோமசுந்தர பாரதியார் நூல்கள்**

1. திருவள்ளுவர் செந்தமிழ் பிரசுரம் மதுரை *1929*
2. அழகு கட்டுரைத்தொகுப்பு (இரண்டாம் பதிப்பு) நாவலர் புத்தக நிலையம், மதுரை, *1975*
3. ஆராய்ச்சி நூல்கள் ( 4 நூல்கள் தொகுப்பு) நாவலர் சோமசுந்தர பாரதியார் கல்வி அறப்பணிக் குழு, மதுரை, *1963*
4. சேரர் தாயமுறை, அண்ணாமலை நகர், *1935*
5. சேரர் பேரூர், தூத்துக்குடி, *1917*
6. தமிழும் தமிழரும் (கட்டுரைத்தொகுப்பு) (இரண்டாம்பதிப்பு) நாவலர் புத்தக நிலையம், மதுரை, *1971*
7. தசரதன் குறையும் கைகேயி நிறையும் (நான்காம் பதிப்பு) நாவலர் புத்தக நிலையம், மதுரை, *1971.*
8. தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை - அகத்திணையியல் (இரண்டாம் பதிப்பு) நாவலர் சோமசுந்தர பாரதியார் கல்வி அறப்பணிக்குழு, மதுரை, *1964.*
9. தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை - புறத்திணையியல் (இரண்டாம் பதிப்பு) நாவலர் சோமசுந்தர பாரதியார் கல்வி அறப்பணிக்குழு, மதுரை, *1965.*
10. தொல்காப்பியர் பொருட்படலப் புத்துரை - மெய்ப்பாட்டியல் (இரண்டாம் பதிப்பு, நாவலர் சோமசுந்தர பாரதியார் கல்வி அறப்பணிக்குழு, மதுரை, *1975.*

**ஆய்வு நூல்கள்**

11. ச.சாம்பசிவனார் (ப.ஆ), நாவலர் புத்தகநிலையம், மதுரை *1991.*
12. மங்கலக் குறிச்சி பொங்கல் நிகழ்ச்சி, (இரண்டாம் பதிப்பு), நாவலர் புத்தக நிலையம், மதுரை, *1979.*
13. மாரி வாயில் (மூன்றாம் பதிப்பு), நாவலர் புத்தக நிலையம், மதுரை, *1976.*

**ஆங்கில நூல்கள்**

14. Chera Kingdom and Cheras of Yore. Navalar Puthaka Nilayam, Madurai, 1979
15. Some Studies about the Cheras of yore, Annamalai Nagar, 1937
16. System of Succession in the Chera Kindgom, Madurai, 1929.
17. Thiruvalluvar, Navalar somasundara Bharathiar Educational Charity Trust, Madurai, 1966
18. The Papers of Dr. Navalar Somasundara Bharathiar, (Ed.) S. Sambasivan, Navalar Puthaka Nilayam, Madurai. 1967.

**கட்டுரைகளின் விவரப் பட்டியல்**

**தமிழ் இலக்கியம் சமயம் பற்றியன (32)**

1. பழந்தமிழ் நாடு
2. நக்கீரரும் கருத்துரிமைப் புலமையறமும்
3. மணிமேகலையின் காலமும் அதை இயற்றிய புலவரும்
4. கல்வியும் படிப்பும்
5. கண்ணகி மணம் மறையோர் மன்றலா? காதற் கற்பா?
6. சிலம்புகழீஇ அயர்தல்
7. பெண்மை நலமும் புலமையறமும்
8. பட்டினப்பாலைத் தலைவன் யார்?
9. அழகு
10. மெய்கண்டார் நூல் மொழிபெயர்ப்பா? தமிழ் முதனூலா?
11. ஓர் எதிருரை
12. வருமொழியில் வருமுரண்கள்
13. ஐயமகற்றல்
14. அனுமன் தூதனா?
15. பிறனில் விழைந்த பேதையர் கதையைத் திறம்படவுரைத்த புலவர் கவினயம்
16. தமிழிலக்கியக் குறிக்கோள்
17. ஆராய்ச்சியின் ஆராய்ச்சி
18. குறிப்புக்குப் பிற்குறிப்பு
19. கம்பரைக் காயும் வம்பு
20. இன்பம்
21. தருமன் சால்பு
22. தமிழர் கடவுட் கொள்கை
23. வெறுப்பின் மறுப்பு
24. குறுந்தொகைப் பாட்டு -40
25. வள்ளுவர் குறளும் தமிழ்நூல் மரபும்
26. வள்ளுவர் குறளும் சங்க நூல்களும்
27. வள்ளுவர் கடவுட் கொள்கை
28. நீத்தார் யார்?
29. ஊழும் முயற்சியும்
30. திருவள்ளுவர் காலமும் திரு. வையாபுரிப்பிள்ளையவர்களின் கொள்கையும்
31. போலிப் புலமையின் காலிக் கதைகள்
32. முயற்சி திருவினையாக்கும்

**தமிழ் இலக்கணம், சொல்லாராய்ச்சி**

1. தொல்காப்பியரின் புறத்திணை வகைமுறை
2. கந்தழி
3. தொல்காப்பியன்
4. தமிழ் வேற்றுமை மரபு
5. எது தமிழ் இலக்கியம்?

6. இலக்கியத்தில் புதுமுறைகள்
7. அறமும் தருமமும்
8. கிழமையும் கடமையும்
9. தமிழில் அயலவர் தொடர்புகள்
10. தொல்காப்பியப் பொருட்பகுதி
11. தொல்காப்பியம்
12. தொல்காப்பிய ஆராய்ச்சிக் கட்டுரைகள்
13. உள்ளுறை

**தமிழ்மொழி, தமிழ்ப்புலவர், தமிழர் நாகரிகம்பண்பாடு, தமிழர்நலம் பற்றியன**

1. நற்றமிழ்
2. தமிழும் தமிழரும்
3. தமிழர் கடவுட் கொள்கை
4. இருபெருங் கலைகள்
5. தாய்மொழியில் உயர்தரக் கல்வி
6. பாரதியார்
7. புதிய சமூகம்
8. பெண்டிர் உரிமை நலம்
9. சாதி மத வேற்றுமையும் சமுதாய ஒற்றுமையும்
10. ஒழுக்கம்
11. தமிழக நிலைமையும் தமிழர் கடமையும்
12. மெய்ம்மை
13. பெண்மை
14. தமிழும் ஹிந்தியும்
15. நாகரிகம்
16. தொழிலாளர் நிலையை உயர்த்துவது எங்கனம்?
17. அறிவும் உணர்வும்
18. பாரதியாரின் தமிழ்ப்புலமை
19. முயற்சி திருவினை ஆக்கும்
20. அறிவாட்சி
21. உலகியலும் மக்கட்பண்பும்
22. தமிழர் நாகரிகம்
23. 'திரு' என்பதே தொன்றுதொட்ட தமிழ் வழக்கு
24. இந்து சமுதாயமும் சாதிகளின் இயல்பும்
25. சுதந்திர இந்தியாவில் தமிழர்

**அரசியல் பற்றியன**

1. தமிழ்நாடும் தலைவர்களும்
2. தேசநேசமும் தமிழகமும்
3. இராசகோபாலாச்சாரியாருக்கு வெளிப்படைக் கடிதம்
4. சுயாட்சி இந்தியாவில் புதிய சமூகம்
5. குடியாட்சிக் கொடுமைகள்
6. இந்தியை எதிர்க்க வேண்டும்
7. சாரதாவின் சட்டமும் சமயவாதப் போராட்டமும்
8. தமிழருக்கு அறிவிப்பு

**மொழிபெயர்ப்பு**

1. காதல்
2. அழகு
3. இளமையும் முதுமையும்
4. பழிக்குப் பழி

*(குறிப்பு : இக்கட்டுரைகளில் பல 'தமிழும் தமிழரும்', 'அழகு', 'திருவள்ளுவர்', 'நாவலர் பாரதியாரின் ஆராய்ச்சி' என்னும் நூல்களில் இடம்பெற்றுள்ளன.)*

**ஆங்கிலக் கட்டுரைகள்**

1. Tamil Classics and Tamilaham
2. Tamil Classics and the Impact of Two Cultures
3. Agathiyan and Tamil Literature
4. The Age of Tholkappiam, Section I
5. The Age of Tholkappiam, Section II
6. The Pre-deluge Pandinad and her Southern Frontier
7. Some Facts about the Tamil Calendar which deserve to be studied
8. Place Names in Pandinad
9. A Clarion Call to cultured Tamils
10. The Greatest Living Poet
11. Subramania Bharathi
12. The Hindu Law and the Tamil Customs
13. Some Aspects of the Family Law and Custom to the Early Tamils
14. Samples of judicial Irresponsibility
15. Some facts and Fables about Karikala, the Great

*(குறிப்பு: இவற்றில் முதல் எட்டு கட்டுரைகளும் இந்நூலாசிரியரது முயற்சியால் "The Papers of Dr. Navalar Somasundara Bharathiar" என்ற நூலில் வெளியிடப்பட்டுள்ளன.)*

**சொற்பொழிவுகளும் பிறவும்**

1. ஈழத்துச் சொற்பொழிவு (1937)
2. வ.ஆ.மாவட்டத் தமிழர் மாநாடு (திருவத்திபுரம்) தலைமையுரை (1938)
3. சென்னை மாநிலத் தமிழாசிரியர் மாநாடு, அண்ணாமலை நகர் தலைமையுரை, (1945)
4. ராமாயணச் சொற்போர் (தீ பரவட்டும்) (1951)
5. முத்தமிழ் வளர்ச்சி மாநாட்டுரை - கோவை (1950)
6. "இந்தி கட்டாயப் பாடமா?" - ச. இராசகோபாலாச்சாரியார் அவர்களுக்கு 25.10.1937ல் அனுப்பப்பட்ட வெளிப்படையான மடல் (தமிழ் - ஆங்கிலம்)

**நாவலர் பாரதியாரின் கட்டுரைகளை வெளியிட்ட இதழ்கள்**

1. அண்ணாமலை பல்கலைக்கழக இதழ்
2. அழகு
3. இந்தியத்தாய்
4. இலக்கியம்
5. ஈழக்கேசரி
6. கல்கி
7. கலைக்கதிர்
8. கலைக்களஞ்சியம் தொகுதி - 6
9. கலைமகள்
10. குமரன்
11. சித்தாந்தம்
12. செந்தமிழ்
13. செந்தமிழ்செல்வி
14. தமிழ்த்தென்றல்
15. தமிழ்ப்பொழில்
16. தமிழர்நாடு
17. தென்றல்
18. தொழிலாளர் உலகம்
19. பஞ்சாமிருதம்
20. பாரதி
21. பொன்னி
22. முல்லை
23. லக்ஷ்மி
24. வானொலி
25. வெண்ணிலா

# 1998



(1914-1994)

## கவிஞர் கா.மு.ஷெரீப்

புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்த விநாயகர் கோட்டை என்ற ஊரைச் சேர்ந்தவர். இவரின் பெற்றோர் காதர்ஷா ராவுத்தர், முகம்மது இபுறாஹிப்பாத்தமாள் ஆகியோர் ஆவர். இவருக்கு எட்டு ஆண்மக்களும் ஒரு பெண் மகவும் உண்டு. மேலும் வளர்ப்புக் குழந்தைகளாக இரண்டு பெண் மகவுகளும், ஒரு ஆண் மகவும் உண்டு. இவர் ஒளி, தமிழ்முழக்கம், சாட்டை, திங்கள் ஆகிய இதழ்களை நடத்தினார். இவரின் நூல்களை புதினம், நாடகம், இலக்கியக் கட்டுரைகள், அறிவுரை நூல், பயண நூல், கவிதைநூல், குறுங்காவியம், அரசியல் நூல், உரை நூல் என்று வகைப்படுத்தலாம். மேயர் திருகிருஷ்ணமூர்த்தி விருது. தாயுமானவர் நாடக விருது, இயல் இசை நாடக மன்றத்தின் விருது, தமிழக அரசின் திரு.வி.க விருது. ஈப்போ, பினாங்கு தமிழ்ச்சங்க விருது, சென்னை முத்தமிழ் மன்ற விருது ஆகிய விருதுகளைப் பெற்றவர்.

**கவிஞர் கா.மு. ஷெரீப்பின் நூல்கள்**

**கட்டுரைகள்**

1. ஒளி
2. இன்றைய சமுதாயம்
3. அமுதக்கலசம்
4. மச்சகந்தி
5. ஆன்மகீதம்
6. நபியே எங்கள் நாயகமே
7. ஆயிஷா நாச்சியார் பிள்ளைத் தமிழ்
8. இறையருள் வேட்டல்
9. கா.மு.ஷெரீப் கவிதைகள்
10. கலைஞர் 63,
11. நீங்களும் பாடலாம் இஸ்லாமிய இசைப்பாடல்கள்

**நாவல்கள்**

12. நல்ல மனைவி
13. விதியை வெல்வோம்
14. தஞ்சை இளவரசி

**சிறுகதைகள்**

15. காதலும் கடமையும்
16. காதல் வேண்டாம்
17. கனகாம்பரம்

**நாடகம்**

18. மன்னன் காதலி
19. பாசம் தந்த பரிசு
20. புதுயுகம்

**சொற்பொழிவு**

21. வானொலியில் சீறாப்புராணம்
22. **கடித முறை :** மகனே கேள்
23. **கட்டுரை :** கண்ணகியின் கனவு
24. **வரலாறு :** வள்ளல் சீதக்காதி வரலாறு

**ஆய்வு :**

25. இஸ்லாம் இந்து மதத்திற்கு விரோதமானதா?
26. பொது சிவில் சட்டம் பொருந்துமா?
27. இறைவனுக்காக வாழ்வது எப்படி? உரைநூல் : சீறாப்புராணம் (நுபுவ்வத்துக் காண்டம் 4 பாகங்கள்) ( ஹிஸ்ரத்துக் காண்டம் 4 பாகங்கள்)

**இதர நூல்கள் :**

28. பத்ருப் போர் பின் விளைவுகள்
29. கிழக்கிலுள்ள பிறைக் கொடிநாடு
30. இஸ்லாமும் ஜீவகாருண்யமும்
31. நபியே எங்கள் நாயகம்
32. முஸ்லீம் லீக் தேவைதானா?
33. வீபீஷணர் வெளியேற்றம்
34. விதியை வெல்வோம்.

# 1998



(1889-1971)

## பரலி சு. நெல்லையப்பர்

பரலி சு. நெல்லையப்பர் வ.உ.சி., பாரதியார், வ.வே.சு. ஐயர் ஆகியோருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றவர். விடுதலைப் போரில் தீவிர ஈடுபாடு காரணமாகப் பலமுறை சிறை பிடிக்கப்பட்டார். 'தம்பி' எனப் பாரதியாரால் அழைக்கப்பட்ட சிறப்புக்குரிய நெல்லையப்பர், எளிய தமிழில் பெரிய விசயங்களை எழுதி தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு உதவியவர். பாரதியின் பல படைப்புகளைச் சிறு நூல்களாக அச்சிட்டு மக்களிடையே பரப்பியவருள் முதலிடம் இவருக்கே. பின்னாட்களில் காந்திய வழியை ஏற்றார். ஆயினும் ஜீவா போன்ற இடதுசாரி இயக்கத்தவர்களுடன் இறுதிவரை ஆழ்ந்த நட்புறவு கொண்டிருந்தார். அந்த நாட்களில் அவருடைய கட்டுரைகளும், விமர்சனங்களும், பதிப்புரைகளும் நூற்றுக்கணக்கில் வெளிவந்தன; ஆயினும் மிகச் சிலவே இன்று நூல் வடிவில் கிடைக்கின்றன.

எளிய தமிழில் பெரிய விஷயங்களை எழுதித் தமிழ்ப் பத்திரிகை வசன நடைகளை வளர்த்தவர்களில் ஒருவர். பிரம்மசாரியான இவர், சென்னை குரோம்பேட்டை பாரதிநகரில் வாழ்ந்து அங்கேயே காலமானார்.

**நெல்லையப்பரின் நூல்கள்**

1. பாரதியார் சரித்திரம்
2. வ.உ.சிதம்பரம்பிள்ளை சரித்திரம்
3. பாரதி வாழ்த்து
4. நெல்லைத் தென்றல்
5. உய்யும் வழி
6. தமிழ்த் திருமண முறை
7. ராதாராணி (மொழி பெயர்ப்பு)
8. ஜோடி மோதிரம் (மொழி பெயர்ப்பு)
9. சுவர்ணலதா
10. மகாத்மா காந்தியின் இந்திய சுயராஜ்ஜியம்
11. மகாத்மா காந்தியின் சகவழி
12. சிவானந்தர் உபதேசமாலை
13. பூலோகத்து சப்த அதிசயங்கள்
14. பகவான் அரவிந்தர் பத்தினிக்கு எழுதிய கடிதங்கள் (மொழிபெயர்ப்பு)

**பதிப்பித்த நூல்கள்**

15. மகாகவி பாரதியாரின் கண்ணன் பாட்டு
16. நாட்டுப்பாட்டு, பாப்பா பாட்டு
17. முரசுப்பாட்டு, குயில்பாட்டு
18. பாரதி அறுபத்தாறு
19. ஆத்ம சோதனை
20. பி.வி. சுப்பையாவின் மாதர்கடமை
21. திருவாசகம் (மலிவுப்பதிப்பு)



# 1998



(1881-1925)

## வ.வே.சு. ஐயர்

இந்திய விடுதலைப்போரில் தீவிரமாக ஈடுபட்டவர். பாரதியார் ஆசிரியராகப் பணியாற்றிய 'இந்தியா' ஏட்டின் இலண்டன் நிருபராகப் பணியாற்றியவர். பாண்டிச்சேரியில் பாரதியார், அரவிந்தர் ஆகியோருடன் சேர்ந்து விடுதலைப் போராட்டங்களில் ஈடுபட்டவர்.

'தேசபக்தன்' நாளிதழின் ஆசிரியராகப் பணியாற்றுகையில் ஆங்கில அரசின் அடக்குமுறைகளைக் கண்டித்து எழுதியதற்காக ஒன்பது மாதங்கள் சிறைத்தண்டனை பெற்றவர். சிறையிலேயே 'கம்பராமாயணம் ஓர் ஆராய்ச்சி' உட்பட பல தமிழ் நூல்களை எழுதியவர். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர்.

**வ.வே.சு. ஐயர் நூல்கள்**

1. குருகோவிந்த சிங்கன்
2. சந்திரகுப்த சக்ரவர்த்தி சரித்திரம்
3. தன்னம்பிக்கை (மொழி பெயர்ப்பு)
4. திருக்குறள் (மொழி பெயர்ப்பு)
5. மங்கையர்க்கரசியின் காதல்
6. வீர சாவர்க்கர்
7. kambaramayan - A study

# 1998



(1908-1982)

## 'கம்பன் அடிப்பொடி'

## காரைக்குடி சா. கணேசன்

இவரின் பெற்றோர் வீர. சாமிநாதன் செட்டியார், நாச்சம்மை அம்மையார். முறையான பள்ளிப் படிப்பு இல்லாதவர். ஆனால் தமிழ் இலக்கண இலக்கியங்களை கற்றவர். வடமொழி, ஆங்கிலம் ஆகியவற்றிலும் புலமை உடையவராக இருந்தார். மர்ரே ராஜம் வெளியிட்ட தமிழ் இலக்கிய வெளியீடுகள் ஒழுங்காகவும், பிழையின்றியும் வெளிவந்ததில் இவருக்கு பெரும்பங்குண்டு. இவர். வைகணபதி என்ற சிற்பியுடன் இணைந்து எழுதிய சிற்ப செந்நூல் மிக முக்கியமானதாக கருதப்படுகிறது. தமிழ் வரிவடிவம் பற்றிய இவரது ஆய்வுகள் குறிப்பிடத்தக்கன. 1938ன் இறுதியில் காரைக்குடியில் கம்பன் கழகத்தை நிறுவியவர்களில் ஒருவர். கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்ட நாளை தம் ஆய்வின் மூலம் அறிவித்தவர். ராஜாஜியின் சுதந்திரா கட்சியின் சட்ட மன்ற உறுப்பினராக (1962-1967) தேர்ந்தெடுக்கப்பட்டு பணியாற்றியவர்.

**சா. கணேசனின் நூல்கள்**

1. முப்பெரும் புலவர்
2. மலர் வணக்கம்
3. தமிழ்த்தாய் வணக்கம்
4. திருப்பள்ளி எழுச்சி
5. தமிழ்த் தொண்டர் தொகை
6. தமிழ்த்தாய்க் கன்னி உரைநடை
7. பிள்ளையார்பட்டி தல வரலாறு
8. நூற்பவர்க்கு
9. இராசராசன்.
10. தமிழ்த்திருமணம்



# 1998



## ச.து.சு. யோகியார்

1930களில் புகழ்பெற்ற திரைப்படப் பாடலாசிரியர் மற்றும் திரைக்கதை எழுத்தாளர். இவருடைய படைப்புகள் மணிக்கொடி, சுதேசமித்திரன் ஆகிய இதழ்களில் வெளியாகின. இவர் அதிர்ஷ்டம், கிருஷ்ணகுமார் ஆகிய திரைப்படங்களுக்கு இயக்குநராகப் பணியாற்றியவர்.

**யோகியார் நூல்கள்**

1. தமிழ்க்குமரி
2. அகல்யா
3. மேரிமக்தலோனா காமினி
4. காதல் மலர்கள்
5. முருக காவியம்
6. கவி உலகில் கம்பன்
7. சங்கம் வளர்த்த தமிழ்
8. மரண தாண்டவம் (சிறுகதைகள்)
9. சுதந்திரச் சுடர்
10. கதையைக் கேளடா (நாட்டுப்பாடல்)
11. முதல் தேவி
12. புது வாழ்வு (நாடகம்)
13. பவானி (நாடகம்)
14. நவபாரதக் குறவஞ்சி கொங்கர் குறவஞ்சி (நாடகம்)

**ஆங்கில நூல்கள்**

15. sita kalyan
16. yama & yami rubiyan
17. Golden net
18. New drops
19. Stray thoughts
20. Hindu atom
21. A day with my master
22. The puranas.

# 2000



(1895-1978)

## வெ. சாமிநாத சர்மா

தமிழில் அரசியல் இலக்கிய முன்னோடியான அமரர் வெ. சாமிநாதசர்மா எழுபதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். தேசிய மற்றும் சர்வதேசிய தலைவர்களுடைய வரலாறு, அரசியல் தத்துவங்கள் பற்றிய இவருடைய நூல்கள் தமிழ் மட்டுமே அறிந்தவர்களுக்குக் கலங்கரை விளக்கமாக அமைந்தன. எந்த வித வசதிகளும் இல்லாத காலத்தில் உலக முழுவதிலுமிருந்து இவர் திரட்டிய தகவல்கள் எழுத்துகளின் மூலம் புதிய உலகை அறிமுகப்படுத்தின. பிளேட்டோ, ரூஸ்ஸோ, காரல்மார்க்ஸ், மாஜினி, ஸன்யாட்ஸென், திலகர், காந்தியடிகள், திரு.வி.க., வ.வே.சு. ஐயர், சுப்பிரமணிய சிவா, பாரதியார் முதலானோரைப்பற்றி இவர் வழங்கியுள்ள வரலாற்றுச்செய்திகள் சிறந்த ஆவணங்களாகும். இவர் தேசியவாதியாகவும். காந்தியவாதியாகவும் இறுதி வரை வாழ்ந்து வழிகாட்டிய எழுத்தாளர். தேசபக்தன், நவசக்தி, ஜோதி மற்றும் சில இதழ்கள் வாயிலாகப் புகழ் பெற்ற பத்திரிகையாளராகத் திகழ்ந்தவர். இவரின் மொழிபெயர்ப்பு நடை தற்கால தமிழ்உரைநடையின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தது என்று சொல்லலாம்.

**சாமிநாதசர்மா நூல்கள்**

**கதைகள்**

1. கௌரீ மணி (பௌராணிக கதை)
2. தலை தீபாவளி (சிறுகதைகள் தொகுப்பு)

**நாடகங்கள்**

3. லட்சுமிநாதன்
4. உத்தியோகம்
5. பாணபுரத்து வீரன்
6. அபிமன்யு
7. உலகம் பலவிதம் (ஓரங்க நாடகங்களின் தொகுப்பு)

**மணிமொழிகள்**

8. சுதந்திர முழக்கம்
9. மாஜினியின் மணிமொழிகள்
10. இந்தியாவின் தேவை

**அரசியல்**

11. ஏப்ரல் 1919 அல்லது பஞ்சாப் படுகொலை
12. பிரிக்கப்பட்ட பர்மா
13. பெடரல் இந்தியா
14. சமஸ்தான இந்தியா
15. உலகக் கண்ணாடி
16. ஸ்பெய்ன் குழப்பம்
17. செக்கோஸ்லோவேகியா
18. பாலஸ்தீனம்
19. அரசியல் வரலாறு
20. ஆசியாவும் உலக சமாதானமும்
21. ஐக்கிய தேச ஸ்தாபனம்
22. அரசாங்கத்தின் பிறப்பு
23. பிரஜைகளின் உரிமைகளும், கடமைகளும்
24. அரசியல் கட்சிகள்
25. நமது தேசியக் கொடி
26. பார்லிமெண்ட்
27. புராதன இந்தியாவின் அரசியல்

**வரலாறுகள்**

28. நமது ஆர்யாவர்த்தம்
29. ருஷ்யாவின் வரலாறு
30. சீனாவின் வரலாறு
31. கிரீஸ் வாழ்ந்த வரலாறு
32. புதிய சீனா

**கட்டுரை இலக்கியம்**

33. காந்தி யார்?
34. நமது பிற்போக்கு
35. எப்படி வாழ வேண்டும்?
36. மனிதன் யார்?
37. பெண்மையிலேதான் வாழ்வு
38. இக்கரையும் அக்கரையும்
39. காந்தியடிகளும் கிராம வாழ்க்கையும்
40. நகைத்தல் நல்லது
41. நாடும் மொழியும்
42. சுதந்திரமும் சீர்திருத்தமும்

**வாழ்க்கை வரலாறுகள்**

43. லோகமான்ய திலகர்
44. ரமண மகரிஷி
45. பண்டிட் மோதிலால் நேரு
46. முஸோலினி
47. அபிசீனிய சக்கரவர்த்தி
48. ஹிட்லர்
49. காந்தியும் - ஜவஹரும்
50. காந்தியும் விவேகானந்தரும்
51. சார்லஸ் டார்வின்
52. ஸர். ஐசக் நியூட்டன்
53. ஸர். ஜகதீச சந்திரபோஸ்
54. தாமஸ் எடிசன்
55. சர். பிரபுல்ல சந்திரரே
56. ஸர். சி.வி. ராமன்
57. கமால் அத்தாதுர்க்
58. ரூஸ்ஸோ
59. கார்ல் மார்க்ஸ்
60. ராமகிருஷ்ணர் ஒரு தீர்க்கதரிசி
61. மாஜினி
62. ஸன்யாட்சென்
63. நான் கண்ட நாவலர்
64. சமுதாயச் சிற்பிகள்

**கடிதங்கள்**

65. மகனே உனக்காக
66. அவள் பிரிவு
67. வரலாறு கண்ட கடிதங்கள்

**பயண இலக்கியம்**

68. எனது பர்மா வழிநடைப் பயணம்

**மொழிபெயர்ப்புகள்**

69. மானிட ஜாதியின் சுதந்திரம்
70. மனோதர்மம்
71. மகாத்மா காந்தி
72. மாஜினியின் மனிதன் கடமை
73. சமுதாய ஒப்பந்தம்
74. பிளேட்டோவின் அரசியல்
75. ராஜதந்திர யுத்தகளப் பிரசங்கங்கள்
76. சுதந்திரத்தின் தேவைகள் யாவை?
77. பிளேட்டோவின் கடிதங்கள்.

**ஆங்கில நூல்**

78. Essentials of Gandhism.

# 2000



(1920-1998)

## கவிஞர் முடியரசன்

அறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன் ஆகியோரின் தாக்கத்தால் ஆளுமைப் பண்புகளை வளர்த்துக் கொண்டவர்; தம் வாழ்விலும் வாக்கிலும் நேர் கொண்ட பார்வையும் உயர்ந்த ஞானச் செருக்கும் கொண்டவர்; தமிழையும் தமிழனையும் உயர்த்துவதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தவர்; 'பூங்கொடி', 'வீர காவியம்', 'காவியப் பாவை' முதலான பற்பல அணிகலன்களைத் தமிழன்னைக்குச் சூட்டி மகிழ்ந்தவர்; 'பாவேந்தர் பரம்பரையின் தலைமகன்' என்ற தகுதிக்கு மிகுதியும் உரியவர்; இருபதாம் நூற்றாண்டுக் கவிதை உலகில் புதுமை பூத்த மரபுக் கவிஞராக விளங்குபவர்.

**கவிஞர் முடியரசனின் நூல்கள்**

1. முடியரசன் கவிதைகள், தமிழண்ணல் (தொகுப்பு), முத்து பதிப்பகம், விழுப்புரம், மூன்றாம் பதிப்பு, 1988.
2. காவியப்பாவை, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, மூன்றாம் பதிப்பு, 1976.
3, கவியரங்கில் முடியரசன், முத்து புத்தக நிலையம், திருச்சி, 1960.
4. பூங்கொடி, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1964.
5. வீரகாவியம், வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1970.
6. ஊன்றுகோல், சன்மார்க்கச் சபை, மேலைச்சிவபுரி, 1983.
7. பாடும் குயில் அன்னம், சிவகங்கை, இரண்டாம் பதிப்பு, 1986
8. நெஞ்சு பொறுக்கவில்லையே, பொன்முடி பதிப்பகம், காரைக்குடி 1985.
9. மனிதனைத் தேடுகிறேன், தமிழ்ப்பாசறை, கருவூர். 1986.
10. தமிழ்முழக்கம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.
11. நெஞ்சிற் பூத்தவை, பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1999.
12. ஞாயிறும் திங்களும், அவைக்களம், காரைக்குடி, 1999.
13. வள்ளுவர் கோட்டம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 1999.
14. புதியதொரு விதி செய்வோம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை. 1999.
15. மனிதரைக் கண்டுகொண்டேன், மணிவாசகர் பதிப்பகம்,சென்னை, 2005.

**கடித இலக்கியம்**

17. அன்புள்ள பாண்டியனுக்கு, ஜெனரல் புக் கம்பெனி, கும்பகோணம், மறுபதிப்பு, 1968.
18. கவியரசர் முடியரசன் கடித இலக்கியம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 1999.

**சிறுகதை**

19. எக்கோவின் காதல், தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 1999.

**கட்டுரை**

20. எப்படி வளரும் தமிழ்? தமிழ்மதி பதிப்பகம், தஞ்சாவூர். மறுபதிப்பு 2001.

**வரலாறு**

21. சீர்திருத்தச் செம்மல் வை.சு.சண்முகனார், முடியரசன் (தொகுப்பு) வானதி பதிப்பகம், சென்னை. 1990.
22. பாட்டுப்பறவையின் வாழ்க்கைப் பயணம்

**ஆண்டுகள் தெரியாதவை**

23. தமிழ்வழிபாடு
24. தாய்மொழி காப்போம்.

■ சாகித்திய அகாதெமியால் இந்திய மொழிகளில் மொழிபெயர்க்க எடுத்துக் கொள்ளப்பட்ட முடியரசனின் பாடல்கள் (1) புனல் நிறைந்த தட மலர்கள் (இயற்கை தாய்) (2) ஒளிமிகுந்த குளிர்நிலவே! (நிலவு) (3) இரவலர்கள் எவரேனும் வருவாரோ? (காற்று) (4) பகல் முழுதும் வெயில் காய்ந்து (ஆறு)(5) கவலையோடு நின்பால் வந்து அமர்ந்திருக்கும் (கடல்) (6) நினைக்கின்ற உள்ளத்தாலும் (மனத்தூய்மை) (7) சின்னஞ் சிறியதோர் வாய்திறந்து (பேசும் தெய்வம்)

■ நேஷனல் புக் டிரஸ்ட்டால் ஆங்கிலத்திலும் இந்தியிலும் மொழிபெயர்க்கப்பட்ட முடியரசனின் பாடல் - **வெள்ளி நிலாவினிலே (தமிழ் என் தாய்)**

# 2000



(1900-1980)

## மயிலை சீனி. வேங்கடசாமி

தமிழ் மொழியில் மறந்ததும், மறைந்ததுமான சிறந்த செய்திகள், அளவு கடந்து உள்ளன. அத்தகைய சீரிய செய்திகளை வெளிக்கொணர்ந்து, வீரிய உணர்வுடன் வெளியிட்ட வித்தகப் பெரும்புலவர் அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி ஆவார். ஐந்திலக்கணங்களில் ஒன்றான யாப்பைப் பற்றி 'யாப்பருங்கல விருத்தி' என்னும் நூலைப் படித்தார். இந்த நூலின் உரையாசிரியர், தமது உரை விளக்கத்தில், பல்வேறு நூல்களிலிருந்து சில செய்யுள்களை எடுத்துக் காட்டுகளாக இயம்பியிருந்தார். அப்படி எடுத்துக்காட்டுகளாகக் கூறிய நூல்கள், தற்போது எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. மறைந்து போன, பேணிக் காக்கப்படாத அந்நூல்களைச் சற்றே எண்ணிப் பார்த்து, மனம் கலங்கினார் அறிஞர் சீனி. வேங்கடசாமி. 'அடடா! எத்தனை, எத்தனை நூல்களைத் தமிழன்னை இழந்து விட்டாள்?' என நெகிழ்ந்து நெடுமூச்சு விட்டார். இத்தகைய நூல்களின் பெயர்களைத் தொகுத்து வெளியிட நினைத்து, அதனைச் செயல்படுத்தினார் சீனி. வேங்கடசாமி.

'மறைந்து போன தமிழ் நூல்கள்' என்னும், ஓர் அரிய நூலைப் படைத்த இப்பேரறிஞர்,' களப்பிரர் காலத் தமிழகம்' என்னும் ஆய்வு நூல் வெளியிட்டுப் பெருமை பெற்றார். இவை தவிர, 'தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்' என்றோர் நூலை எழுதி வெளியிட்ட அப்பேராசானே, முதன் முதலில் அழகுக் கலைகள் பற்றித் தமிழில் எழுதிய பெருமை பெற்றார். 'கொங்கு நாட்டு வரலாறு, துளுவ நாட்டு வரலாறு, சேரன் செங்குட்டுவன், மகேந்திர வர்மன், நரசிம்ம வர்மன், மூன்றாம் நந்தி வர்மன் முதலிய நூல்கள் அறிஞர் சீனி வேங்கடசாமி வழங்கியுள்ள வரலாற்றுச் செல்வங்கள். இவர் தமிழின் வரலாற்றில், தனி ஓர் அத்தியாயம் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

**மயிலை சீனி. வேங்கடசாமி நூல்கள்**

1. கிறித்துவமும் தமிழும்
2. பௌத்தமும் தமிழும்
3. சமணமும் தமிழும்
4. மகாபலிபுரத்து ஜைன சிற்பம்
5. இறையனார் களவியல் (ஆராய்ச்சி)
6. பௌத்தக் கதைகள்
7. இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவங்கள்
8. மகேந்திரவர்மன்
9. நரசிம்மவர்மன்
10. மூன்றாம் நந்திவர்மன்
11. புத்த ஜாதகக் கதைகள்
12. அஞ்சிறைத்தும்பி



13. கௌதம புத்தர்
14. மறைந்து போன தமிழ் நூல்கள்
15. சாசனச் செய்யும் மஞ்சரி
16. மனோன்மணீய ஆராய்ச்சியும் உரையும்
17. பழங்காலத் தமிழ் வாணிகம்
18. கொங்கு நாட்டு வரலாறு
19. களப்பிரர் ஆட்சியில் தமிழகம்
20. இசைவாணர் கதைகள்
21. உணவு நூல்
22. துளுவ நாட்டு வரலாறு
23. சமயங்கள் வளர்த்த தமிழ்
24. சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள்
25. சேரன் செங்குட்டுவன்
26. 19ம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்
27. சங்க காலச் சேர சோழ பாண்டியர்
28. சங்க காலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துகள்
29. நுண் கலைகள்
30. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்
31. சிறுபாணன் சென்ற பெருவழி
32. மகேந்திரவர்மன் இயற்றிய மத்தவிலாசம் (மொழி பெயர்ப்பு)
33. பழந்தமிழும் பல்வகைச் சமயமும்

2000



(1920-1998)

## சாமிசிதம்பரனார்

பகுத்தறிவுப் பார்வையுடன் பழந்தமிழ் இலக்கியங்கள் வாயிலாகத் தமிழ் மக்களின் வாழ்க்கையையும் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டையும், நாகரிகத்தையும் தெளிவுபடுத்தியவர் சாமி சிதம்பரனார். முற்போக்கு இயக்கத்தின் முன்னணித் தலைவர்களில் ஒருவராய்த் திகழ்ந்தவர். புலமை மிக்க தமிழ் அறிஞராக இருந்த போதும் அவர் பழைமைவாதியாக இருக்கவில்லை. சமுதாய மாற்றத்தையும் பரிணாம வளர்ச்சியையும் கணக்கில் கொண்டு தமிழ் இலக்கியத்தை ஆய்வு செய்தவர். பிற்போக்குவாதிகளால் உருவாக்கி விடப்பட்ட பல கட்டுக்கதைகளையும் கற்பனைகளையும் இவருடைய கட்டுரைகள் தவிடு பொடியாக்கின.

**சாமிசிதம்பரனார் நூல்கள்**

1. 1921 கற்பரசியார் நளாயினி வெண்பா
2. 1923 இராமலிங்கர் பாட்டுத்திரட்டு
3, 1925 இன்பசாகரம் (சமூகசீர்திருத்த வசன நாடகம்)
4. 1928 சுதா வாசகப்பாட்டும் செய்யுள் பாட்டும் தமிழ்ப்பாடத்தொகையும் - (உரைநடையும் செய்யுளும்)
5. 1929 பெண்மக்கள் பெருமை
6. 1930 மணிமேகலை (பாடநூல்)
7. 1938 சிதம்பரனார் சீர்திருத்தப் பாடல்கள்
8, 1939 தமிழர் தலைவர் (பெரியார் ஈ.வெ.ரா வரலாறு)
9. 1940 ஆபுத்திரன் அல்லது சமூக ஊழியன்
10. 1944 அணைந்த விளக்கு ( கவிதை நாடகம்)
11. 1946, உமர்கய்யாம் பாடல்கள் (தமிழாக்கம்)
12. 1948, அணைந்த விளக்கு (வசன நாடகம்)
13. 1949, வள்ளுவர் காட்டிய வைதீகம்
14. 1949 வாலிபர் உலகம் (மொழிபெயர்ப்பு)
15. 1949 புகழேந்தியின் புலமை
16. 1952, புதிய தமிழகம்
17. 1953 காதல் காட்சிகள் (இலக்கியத்தில்)
18. 1954 சீவகசிந்தாமணி
19. 1954 வளரும் தமிழ்
20. 1955 முன்சீப் வேதநாயகம் பிள்ளை
21. 1955 வடலூரார் கவியமுதம்
22. 1955 வள்ளலார் காட்டும் வழி
23. 1955 கம்பன் கண்ட தமிழகம்
24. 1955 குறுந்தொகைப் பெருஞ்செல்வம்
25. 1956 திருக்குறள் மூலமும் (தெளிபொருள் விளக்கவுரையும்)
26. 1956 தொல்காப்பியத் தமிழர்
27. 1956 சாமிசிதம்பரனார் சிந்தனைச்செய்யுள்.
28. 1956 பத்துப்பாட்டும் பண்டைத்தமிழரும்
29. 1956 வள்ளுவர் வாழ்ந்த தமிழகம்
30. 1956 பட்டினத்தார், அப்பர் அருள்மொழி
31. 1956 நாயன்மார்களின் நல்அறிவுரைகள்
32. 1956 எட்டுத்தொகையும் தமிழர்பண்பாடும்
33. 1957 பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்
34. 1958 இலக்கியச்சோலை (புறநானூறு)
35. 1958 பொதுமொழியின் அவசியம்
36. 1958 சிலப்பதிகாரத் தமிழகம்
37. 1958 பழமொழி நானூறு
38. 1958 நற்றிணைக் காட்சிகள்
39. 1959 திருக்குறள் - பொருள்விளக்கம்
40. 1959 வடலூரார் வாய்மொழி
41. 1959 ஆழ்வார்களின் அருள்நெறி
42. 1959 பழந்தமிழர் அரசியல்
43. 1959 தேவாரத் திருமொழிகள்
44. 1959 நாலடியார் (பாட்டும் உரையும்)
45. 1960 மணிமேகலை காட்டும் மனித வாழ்வு
46. 1960 நான்மணிக்கடிகை (பாட்டும் உரையும்)
47. 1960 இந்திரவிழா
48. 1960 சங்கப்புலவர் சன்மார்க்கம்
49. 1960 மணிவாசகர் மணிமொழிகள்
50. 1960 அருணகிரியார் குமரகுருபரர் அறிவுரைகள்
51. 1960 பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்
52. 1960 சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம்
53. 1960 சாமிசிதம்பரனார் புதுக்குறள்
54. 1962 கம்பராமாயணத் தொகுப்பு
55. 1963 பட்டினத்தார் தாயுமானவர் பாடல்கள்
56. 1963 இலக்கியம் என்றால் என்ன?
57. 1963 தமிழர் வீரம்
58. 1964 அறிவு (கவிதை)
59. 1964 பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை
60. 1964 சிறுகதைச் சோலை
61. 1964 சாமிசிதம்பரனார் கட்டுரைத்தொகுப்பு
62. 1964 சாமிசிதம்பரனார் கவிதைத்தொகுப்பு
63. 1960 தேவாரத் திருமொழிகள்
64. 1960 வளரும் தமிழ்

## 2001



(1907-1989)

## கா. அப்பாத்துரையார்

பன்மொழிப் புலவர் என்ற சிறப்புப் பெயருக்கு உரியவராக இருந்தவர். நாற்பது மொழிகளைக் கற்றிருந்தமை வியப்பூட்டுகின்றது. இலக்கியம், வரலாறு, வாழ்வியல், மொழிபெயர்ப்பு, மொழியியல், நிலவியல், அகராதி எனப் பலதுறைகளில் ஏறத்தாழ நூற்றெழுபது நூல்களைப் படைத்த பெருமை இப்பன்மொழிப் புலவர்க்கு உண்டு. தென்மொழி, உலக இலக்கியங்கள், தென்னாட்டுப் போர்க் களங்கள், குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு, திருக்குறள் மணிவிளக்க உரை, ஆங்கிலம் தமிழ் அகராதி என்பன அவர் படைப்புகளில் சில. தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, ஜீவானந்தம், புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், மறைமலை அடிகளார், திருவி.க. ஆகியவர்களின் பாராட்டைப் பெற்றவர். தமிழ் மொழி, தமிழினம் என்பவற்றின் வேரையும் விழுதையும் ஆராய்ந்து அவற்றுக்கு உலகத் தொடர்பு உண்டு என்று காட்டிய பெருமை இவருக்கு உண்டு.

**அப்பாத்துரையாரின் நூல்கள்**

1. அண்ணன் அருங்குறள் அன்னை நிலையம், கோனாபட்டு, 1942
2. 'அய்.நா. அமைப்பு, 1954.
3. அறிவியல் முனைவர் அய்ன்ஸ்டீன், சை.சி கழகம், 1953
4. ஆண்டி மடம், பொன்னி இதழ் வெளியிட்ட விருந்து வரிசையில் வெளிவந்தது, 1952
5. 1800 ஆண்டுக்கு முற்பட்ட தமிழகம், சை.சி கழகம், 1956.
6. அறக்கோட்டம், விருந்து வரிசை, 1952
7. அலிபாபா,
8. முதலீடு, அறிவுக்கடல் பதிப்பகம்,
9. மேகலை மூவரும், சேகர் பதிப்பகம், 1966
10. அறிவுச்சுடர், சை.சி கழகம், 1956
11. ஆங்கிலத் தமிழ் முத்து அகர வரிசை, சை.சி கழகம், 1963
12. அறிவுலக மேதை பெர்னாட்ஷா, சை.சி கழகம், 1950
13. அன்பின் வெற்றி, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 1946
14. ஆர்தர் கதைகள், சை.சி கழகம், 1967
15. அரியநாத முதலியார், நேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1946
16. ஆண்டியின் புதையல், சை.சி கழகம், 1957
17. ஆங்கிலப் புலவர் வரலாறு, சை.சி கழகம், 1947
18. அய்ந்தாம் ஹென்றி, சை.சி கழகம்
19. பெஞ்சமின் ஃப்பிராங்களின், கழகம், 1957
20. சிந்தாமணி இன்பம், அலமேலு நிலையம்.
21. சிறுவர்களுக்கான சிறுகதைகள், சை.சி கழகம், 1956
22. சார்லஸ் லேம்ப், சை.சி கழகம், 1946
23. சரித்திரம் பேசுகிறது அருணோதயம், 1959
24. காங்கிரஸ் வரலாறு, 1953
25. செந்தமிழ்ச் செல்வம், சேகர் பதிப்பகம், 1968
26. செஸ்டர்டன் கடிதங்கள், சை.சி கழகம், 1957
27. கூப்பர் கடிதங்கள், டியுகோ பப்ளிகேஷன்ஸ், 1952
28. சிங்காரச் சிறுகதைகள், சை.சி கழகம், 1956
29. சேரன் வஞ்சி, எஜுகேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1955
30. காங்கிரசுக்கு ஏன் ஓட்டுச் செய்ய வேண்டும்?, நேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1945
31. டேவிட் லிவிங்ஸ்டன், டியுகோ பப்ளிகேஷன்ஸ், 1946
32. சென்னை நகர வரலாறு, சை.சி கழகம், 1948
33. எண்ணிய வண்ணமே, சை.சி கழகம்
34. ஹைதர் அலி, பாரி நிலையம், 1964
35. ஹோரேஸ அ வால்போல் கடிதங்கள், ஆசிரியர் கழகம், 1956
36. இல்லற மாண்பு, காரைக்கால் திருமண விழா மலர், 1944
37. இதுதான் திராவிட நாடு, மலர் நிலையம், 1956
38. இரு குழந்தைகள், ஆசிரியர் கழகம், 1951
39. இன்பத்துள் இன்பம், அலமேலு நிலையம் திருச்சி.
40. இருதுளிக் கண்ணீர், அருணோதயம்
41. இரு நகரக் கதை
42. இந்து லேகா, மலர் நிலையம் வெளியீடு
43. ஜெஞ்சிக் கதை, சாகித்திய அகாதெமி, 1944
44. ஜேன் அயர், சை.சி கழகம், 1954
45. கட்டுரை இலக்கியம், மகரம் வெளியீடு, 1967
46. கிரேக்கக் கதைகள், சை.சி கழகம் 1957
47. கழகச் சிறுகதைகள், சை.சி கழகம், 1956
48. கதை இன்பம், சை.சி கழகம், 1956
49. கிருஷ்ணன் தூது சருக்கம், முத்தமிழ் நிலையம், 1946
50. கலையுலக மன்னன், சை.சி கழகம், 1949
51. கன்னியின் சோதனை
52. குடி அரசு, மேகலை வெளியீடு, 1952
53. கொங்குத் தமிழக வரலாறு, அலமேலு நிலையம், 1983
54. கல் மனிதன், பொன்னியின் விருந்து வரிசை, 1952
55. கடல் மறவர், விருந்து வரிசை, 1952
56. கழக ஆங்கில தமிழ் அகரவரிசை, சை.சி கழகம், 1953
57. குமரிக்காண்டம், சை.சி கழகம், 1940
58. முத்தாரம், கட்டுரை 1956
59. கால்டுவெல் ஒப்பிலக்கணம், சை.சி கழகம், 1944
60. குழந்தை உலகம், சை.சி கழகம், 1967
61. கிருஷ்ண தேவராயர், நேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1946
62. குடியாட்சி, சை.சி கழகம், 1948
63. மருதூர் மாணிக்கம், அருணோதயம், 1958
64. முதலீடு, மேகலை வெளியீடு, 1952
65. மணிமேகலை இன்பம், 1958

66. மதம் அவசியமா?
பொன்னி வெளியீடு, 1959
67. மாமனார் வீடு,
விருந்து வரிசை, 1951-52
68. மே விழா முழக்கம்,
அலமேலு நிலையம், 1950
69. மேனாட்டு இலக்கியங்கள்,
சை.சி கழகம், 1960
70. மலை நாட்டு மங்கை, சாகித்திய அகாதெமி, 1961-62
71. மனிதனும் அமைப்புகளும்,
சை.சி கழகம், 1957-58
72. நாட்டுப்புறக் கதைகள்,
சை.சி கழகம், 1956
73. நல்வாழ்வுக் கட்டுரைகள்,
சை.சி கழகம், 1957
74. நாட்டுப்புறக் கதைகள்,
சை.சி கழகம், 1959
75. நீலகேசி, பாரி நிலையம்
76. நாத்திகர் யார்? முத்தமிழ் நிலையம் (முதல் பதிப்பு)
77. நிழலும் - ஒளியும்,
ஆசிரியர் கழகம், 1954
78. நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்,
சை.சி கழகம், 1949
79. ஊழ் கடந்த மூவர்,
ஆசிரியர் சை.சி கழகம், 1947
80. பல நாட்டுச் சிறுகதைகள்,
சை.சி கழகம், 1957.
81. புத்தரின் சிறுகதைகள்,
சை.சி கழகம், 1954
82. பொதுவுடைமை,
மேகலை வெளியீடு, 1952
83. பொருளியல்வாதம்,
மேகலை வெளியீடு, 1952
84. பொன்னின் தேட்டம்,
சை.சி கழகம், 1957.
85. போதும் முதலாளித்துவம்,
ஸ்டார் பிரசுரம், 1946
86. பேரின்பச்சோலை,
சை.சி கழகம், 1957.
87. சிலம்புச் செல்வம், அருணோதயம் வெளியீடு, 1958
88. சங்க இலக்கிய மாண்பு,
அவ்வை நூலகம், 1949
89. சமூக ஒப்பந்தம்,
மேகலை வெளியீடு, 1952
90. சமதர்ம விளக்கம்,
ஆசிரியர் கழகம், 1947
91. ஷேக்ஸ்பியர் கதைகள்,
சை.சி கழகம், 1945, 1950, 1954
92. சங்ககாலப் புலவர்கள்,
நேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1946
93. திருக்குறள் மணி விளக்க உரை,
அலமேலு நிலையம்
94. திராவிடப் பண்பு,
சை.சி கழகம், 1955
95. தென்னாடு, மலர் நிலையம், 1955
96. தமிழன் உரிமை,
அவ்வை நூலகம், 1960
97. தென்னகப் பண்பு, மலர் நிலையம், 1957
98. தேன்மொழி,
மலர் நிலையம், 1956.
99. தமிழ் வாழ்க.
அன்னை நிலையம், 1942, 1956
100. தென்னாட்டுப் போர்க்களங்கள்,
அவ்வை நிலையம், 1954
101. தாயகத்தின் அழைப்பு,
பொன்னியின் விருந்து வரிசை, 1951
102. துன்பக்கேணி,
விருந்து வரிசை, 1951.
103. டாம் பிரவுனின் பள்ளி வாழ்க்கை
சை.சி கழதம். 1955
104. The Mind and Heart of Thiruvalluvar,
சேகர் பதிப்பகம், 1967.
105. உயிரின் இயல்பு,
வாலாஜா இந்துமத பாடசாலை வெளியீடு, 1944.
106. உலக இலக்கியங்கள், கழகம்
107. உலகம் சுற்றுகிறது,
அவ்வை நூலகம், 1957



108. மாலதி மாதவம்,
விருந்து வரிசை, 1951
109. வியப்பூட்டும் சிறுகதைகள், கழகம், 1957
110. வாழ்வாங்கு வாழ்தல்,
சை.சி கழகம், 1956
111. வகுப்புவாரிகள் யார்?
மீனவர் கழகம், 1947
112. வள்ளுவர் நிழல்,
அருணோதயம், 1959
113. வெற்றித் திருநகர், அலமேலு நிலையம், 1964
114. வளரும் தமிழ், அருணோதயம்
115. வருங்காலத் தமிழகம், மா.சு. சம்பந்தம் வெளியீடு, 1946
116. வாழ்க அருணோதயம், 1957
117. வாடா மலர், சேகர் பதிப்பகம், 1960
118. விந்தைக் கதைகள், சை.சி கழகம், 1958.
119. வின்ஸ்டென் சர்ச்சில்,
எஜுகேஷனல் பப்ளிகேஷன்ஸ், 1945.
120. வாழும் வகை, சை.சி கழகம்
121. வருங்காலத் தலைவர்களுக்கு,
சை.சி கழகம்
122. வீரஅபிமன்னன்,
ஆசிரியர் கழகம்.
123. யுத்தக் கதைகள்,
நவயுகப் பிரசுராலயம், 1940

# 2002



(1906-1948)

## புதுமைப்பித்தன்

தமிழ்ச் சிறுகதை முன்னோடிகளில் ஒருவரான புதுமைப்பித்தன் சிறுகதைக்கு இலக்கியத் தகுதி பெற்றுத் தந்த கதைகள் பலவற்றை எழுதியுள்ளார். புதுப்புது உத்திகளும், மொழிக்கு வளம் சேர்க்கும் நடை நயமும் கலந்துள்ளன. வசதி மிகுந்த, ஆயினும் மனிதாபிமானம் இல்லாத, பெரிய மனிதர்களை எள்ளி நகையாடும் போக்கு, ஏழை எளியவர்களுக்கு இரக்கப்படும் உள்ளம், தன்னம்பிக்கை, புரட்சியை நாடும் மனப்பான்மை ஆகியவற்றை இவரது கதைகளில் காணலாம். வழக்கில் உள்ள சொற்களைக் கொண்டு தமிழ் நடைக்குப் புது வேகமும் புது அழகும் சேர்த்தவர் புதுமைப்பித்தன். கிண்டலும் நையாண்டியும் நிறைந்த இவரது கதைகள், சோகத்தை அடி நாதமாகக் கொண்டு வாழ்க்கையின் உண்மைகளை உள்ளது உள்ளபடி சுட்டிக் காட்டும் சொற்சித்திரங்கள் ஆகும்.

**புதுமைப்பித்தன் நூல்கள்**

**சிறுகதை**

1. புதுமைப்பித்தன் கதைகள்
2. ஆறு கதைகள்
3. நாசகாரக் கும்பல்
4. பக்த குசேலா
5. ஆண்மை
6. காஞ்சனை
7. சிற்றன்னை

**மொழிபெயர்ப்பு**

8. உலகத்துச் சிறுகதைகள்
9. பளிங்குச் சிலை (கதைகள்)
10. தெய்வம் கொடுத்த வரம்
11. மணியோசை
12. உலக அரங்கு (நாடகங்கள்)
13. பிரேத மனிதன் (நாவல்)
14. பலிபீடம் (நாவல்: 15. அலெக்சாண்டர் குப்ரின் எழுதிய "Yama The pit" நாவலின் முதல் பாகம் மட்டும்)

**கட்டுரைகள்**

15. புதுமைப்பித்தன் கட்டுரைகள்
16. அதிகாரம் யாருக்கு?
17. நமது இலக்கியம்

**கவிதை**

18. புதுமைப்பித்தன் கவிதைகள்

**வரலாறு**

19. பாசிஸ்ட் ஜடாமுனி (முசோலினி வாழ்க்கை வரலாறு)
20. கப்சிப் தர்பார் (ஹிட்லர் வாழ்க்கை வரலாறு)



# 2002



## கு.ப. சேதுஅம்மாள்

எழுத்தாளர் கு.ப. ராஜகோபாலனின் சகோதரியான இவர் தன் வீட்டில் நிலவிய இலக்கியச் சூழலின் உந்துதலால் எழுதியவர். 50 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து எழுதியவர். இவருடைய கதைகள் காந்தி, சித்திரபூமி, பெண்மணி, மங்கை, சிவாஜி, ஸிந்துஸ்தான், ஆனந்தவிகடன், சுதாமணி, புதுமைப்பெண், நவயுவன், கதம்பம், கிராம ஊழியன், கலாமோகினி, சுதேசமித்திரன், மின்னல், குண்டூசி, திரட்டு, மணிக்கொடி, வசந்தம், கதைக்கடல், தேனீ, கலைமகள், கல்கி, தினமணி, தினமணிக்கதிர், தினமணிச்சுடர், வெள்ளித்திரை, அருணோதயம் ஆகிய இதழ்களில் வெளியாகின.

**கு.ப. சேதுஅம்மாள் நூல்கள்**

**நாவல்கள்**

1. மைதிலி (வைரம் பதிப்பகம்)
2. உஷா (வைரம் பதிப்பகம்)
3. தனி வழியே (வைரம் பதிப்பகம்)
4. ஓட்டமும் நடையும் (வைரம் பதிப்பகம்)
5. அம்பிகா (மல்லிகைப் பதிப்பு)
6. கல்பனா (மல்லிகைப் பதிப்பு)
7. குரலும் பதிலும் (இமயம் பதிப்பகம்)
8. உண்மையின் உள்ளம் (வள்ளுவர் பண்ணை)

**சிறுகதைத் தொகுதிகள்**

9. தெய்வத்தின் பரிசு (வானதி பதிப்பகம்)
10. வீர வனிதை (மின்னொளி பதிப்பகம்)
11. உயிரின் அழைப்பு (சாரதி பிரசுரம்)
12. ஒளி உதயம் (புதுமலர் நிலையம்)
13. செவ்வாய் தோஷம்
14. வாழ்க்கை புயல்
15. லட்சியத்தாய்
16. விதியும் விலங்கும்
17. ஆசாபங்கம்
18. அற்பவிஷயம்
19. சூர்ய புத்திரி
20. அன்றும் இன்றும்
21. ஒரு காட்சி
22. லட்சுமணன் சிரித்தான்
23. முக்திமார்க்கம்
24. மனிதனும் ஆசைகளும்
25. மானநஷ்டம்
26. மை ஆராதனை
27. விட்ட குறை
28. பிரியும் பாதை
29. தர்ம போதம்
30. வாழும் வழி
31. கண்டுகொண்டான்
32. விதி
33. தாபம்
34. தரிசனம்
35. கண்ணன் கனிவு

**சமையல் நூல்**

36. சமையற்கலை (இருபாகங்கள்) (வானதி பதிப்பகம்)

**சரித்திரம்**

37. பாரதப்பெண் - மல்லிகை பதிப்பகம்

- போதி மாதவன் (புத்தர் வரலாறு) - சேகர் பதிப்பகம்

# 2004



(1884-1944)

## நாவலர் பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார்

தஞ்சை மாவட்டத்தில் உள்ள நடுக்காவேரி என்ற ஊரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவருடைய இயற்பெயர் சிவப்பிரகாசம். இவரின் பெற்றோர் முத்துசாமி நாட்டார் தைலம்மாள் தம்பதியர். 1905 ல் பிரவேச பண்டிதம், 1906ல் பால பண்டிதம் 1907ல் பண்டிதம் ஆகிய தேர்வுகளில் சிறப்பாகத் தேறி பல பரிசுகளைப் பெற்றார். இவர் திருச்சியில் பேராசிரியராகப் பணிபுரிந்த போது சிலப்பதிகாரம் மற்றும் தொல்காப்பியத்திலும் தமக்கு ஏற்பட்ட ஐயங்களை இவரிடம் கேட்டு தெளிவு பெற்றார் பாரதியார் என்ற செய்தியும் உண்டு. திருச்சியில் இவர் பணிபுரிந்த எஸ்.பி.ஜி.கல்லூரி மூடப்பட்ட பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து எட்டு ஆண்டுகள் பணிபுரிந்தார். இந்தப் பணி ஓய்வுக்குப் பின் கரந்தை தமிழ்ச் சங்கத்தில் மதிப்பியல் முதல்வராக இருந்தார். 1940ல் சென்னை மாகாண தமிழ் சங்கம் இவருக்கு நாவலர் என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தது. 1923ல் இவரால் எழுதப்பட்ட கள்ளர் சரித்திரம் என்ற நூல் ஒரு குறிப்பிட்ட சாதி சார்ந்ததாக இருந்தாலும். பல்கலைக் கழகங்களில் பாடமாக வைக்கத் தகுதி உடையது என்றார் உ.வே.சா. தஞ்சை அருகே உள்ள வெண்ணாற்றங் கரையில் இவரின் நினைவாக ஒரு தமிழ்க் கல்லூரி இயங்கி வருகிறது.

**ந.மு. வேங்கடசாமி நாட்டார் நூல்கள்**

1. வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி
2. நக்கீரர்
3. கபிலர்
4. கள்ளர் சரித்திரம்
5. கபிலர் ஆராய்ச்சி
6. சோழர் சரித்திரம்
7. கட்டுரைத் திரட்டு 1 & 2
8. கண்ணகி வரலாறும் கற்பு மாண்பும்
9. திருவிளையாடற்புராணம் (உரை)
10. நீதிநூற்கொத்து
11. இன்னா நாற்பது
12. இனியவை நாற்பது
13. கார் நாற்பது
14. வெற்றி வேற்கை
15. நன்னெறி
16. அகநானூறு
17. சிலப்பதிகாரம் (மூலமும் உரையும்)
18. மணிமேகலை (மூலமும் உரையும்)
19. அமிதசாகரர் இயற்றிய யாப்பருங்கலக்காரிகை மூலமும், குணசாகரர் இயற்றிய உரையும் (ந.மு. வே. திருத்தங்களுடன்)
20. அகத்தியர்
21. தொல்காப்பிய ஆராய்ச்சி
22. திரிகடுகம் மூலமும் உரையும்
23. சோழர் சரித்திரம்



# 2004



## க.நா. சுப்பிரமணியம்

தஞ்சாவூர் அருகில் உள்ள வலங்கைமான் என்ற ஊரில் பிறந்தவர். இவருடைய பொய்த்தேவு முக்கிய தமிழின் முக்கிய நாவல் என்று கூறப்படுகின்றது. தமிழ் இலக்கியத்தின் மிகச் சிறந்த விமர்சகர்களில் ஒருவர். மொழி பெயர்ப்பாளர், இலக்கிய விமர்சனக்கட்டுரைகளை தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதியவர். இலக்கிய வட்டம் என்ற மாத இதழை நடத்தியவர்.

**க.நா.சு.வின் நூல்கள்**

**நாவல்**

1. சர்மாவின் உயில்
2. சமூக சித்திரம்
3. ஏழுபேர்
4. பெரிய மனிதன்
5. வாழ்ந்தவர் கெட்டால்
6. அவரவர் பாடு
7. பட்டணத்துப் பேச்சு
8. மாதவி
9. ஒரு நாள்
10. அசுரகணம்
11. ஆட்கொல்லி
12. தந்தையும் மகளும்
13. பொய்த்தேவு
14. தாமஸ் வந்தார்
15. கோதை சிரித்தாள் (தமிழக அரசு பரிசு பெற்றது)
16. அவதூதர்
17. பித்தப் பூ
18. நளினி

**சிறுகதைத் தொகுதிகள்**

1. ஆடரங்கு
2. தெய்வ ஜனனம்
3. மணிக் கூண்டு
4. க.நா.சு.சிறுகதைகள் தொகுதி - I, II, III

**நோபல் பரிசு பெற்ற நாவல்கள் – தமிழ் மொழிபெயர்ப்பு**

1. ரோமன் ரோலந்து - ஜான் கிரிஸ்டோபர்
2. நட்ஹாம்சன் : நிலவளம்
3. செல்மாலாகர்லெவ் : மத குரு
4. பேர்லாகர் குவிஸ்ட் : பாரபஸ்
5. ஆந்த்ரே மீடு : குள்ளன்
6. எரிக்ஸஸ் : விரோதி

**சிறந்த ஆசிரியர்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள்**

1. ஹென்றி இப்சன் - பொம்மையா? மனைவியா?
2. ஸ்டீபன் கிரேன் - திறந்த படகு
3. ஸ்டீபன் கிரேன் - மணமகள் வருகை
4. காதரீன் அன்னிபோட்டர் - குருதிப்பூ
5. வில்லியம் சரோயான் - மனுஷ்ய நாடகம்
6. ஜான் ஸ்டீபன் பெக் - கடல் முத்து
7. செல்மா லாகர் லெவ் - தேவமலர்
8. ஜார்ஜ் ஆர்வெல் - விலங்குப் பண்ணை
9. ஜார்ஜ் ஆர்வெல் - 1984

10. ஐரோப்பிய சிறுகதைகள்
11. ஜெர்மனி சிறுகதைகள்

**வெளிவர வேண்டியவை***

1. திருவலங்காடு - நாவல் (ஆயிரம் பக்கங்கள்)
2. ஜாதி முத்து - நாவல்
3. சிறுகதைகள்- நூற்றுக்கு மேல்
4. தமிழ், ஆங்கிலக் கட்டுரைகள் - நூற்றுக்கு மேல்

**கவிதைத் தொகுதிகள்**

1. க.நா.சு.கவிதைகள்
2. மயன் கவிதைகள்

**கட்டுரைத் தொகுதிகள்**

1. விமரிசனக் கலை
2. இலக்கிய விசாரம்
3. நாவல் கலை
4. பாரதியின் காட்சிகள்
5. தமிழின் முதல் ஐந்து நாவல்கள்
6. இந்திய சிந்தனை வளம்
7. இலக்கியத்திறன்
8. இலக்கியத்திற்கு ஒரு இயக்கம் (சாகித்திய அகாதமி விருதுபெற்றது)
9. பத்து இந்திய நாவல்கள்
10. இந்திய மரபு

**நாடகம்**

1. நால்வர்
2. ஊதாரி

**தமிழில் இருந்து ஆங்கில மொழிபெயர்ப்பு**

1. சிலப்பதிகாரம்
2. திருக்குறள் (அறத்துப்பால்மட்டும்)
3. குறுந்தொகை
4. பி.ஆர்.ராஜமையரின் கமலாம்பாள் சரித்திரம்
5. நீல. பத்மநாபன் - தலைமுறைகள்
6. புதுமைப்பித்தன், மௌனி கு. அழகிரிசாமி, ஜெயகாந்தன் உள்ளிட்ட எழுத்தாளர்களின் சிறுகதைகள்
7. ஆர். சண்முகசுந்தரம் எழுதிய நாகம்மாள்

★ வெளிவர வேண்டியவை என்று குறிப்பிட்டிற்கும் பட்டியல் தமிழ் வளர்ச்சி துறை 2004 ஆம் ஆண்டு பட்டியலில் உள்ளது.



# 2004



(1900-1976)

## ந. பிச்சமூர்த்தி

எழுபத்தேழு ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த ந.பிச்சமூர்த்தி தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவர். முப்பதுகளில் இலக்கிய மறுமலர்ச்சிக்குக் காரணமானவர்களில் ஒருவர். நவீன தமிழ்க் கவிதையின் பிதாமகன். புகழ், அங்கீகாரம், செல்வம், இவை குறித்துப் பொருட்படுத்தாமல் தன்னிச்சையாகப் பாடித் திரிந்த வானம்பாடி அவர். இலக்கியம், நாடகம், மருத்துவம், ஆகிய துறைகளில் பரம்பரையாக ஈடுபட்டுள்ளது அவரது குடும்பம். கும்பகோணத்தில் தனது பள்ளிக் கல்வியை முடித்த பிறகு சென்னையில் சட்டப்படிப்பும், கும்பகோணத்தில் வழக்கறிஞர் தொழிலையும் மேற்கொண்டவர். தமிழில் புதுக்கவிதையின் தந்தை என்று அறியப்பட்டவர்.

**ந. பிச்சமூர்த்தி நூல்கள்**

1. பதினெட்டாம் பெருக்கு - ஹிமாலயப் பிரசுரம் 1944, (பதினைந்து கதைகள் கொண்ட தொகுப்பு)
2. ஜம்பரும் வேஷ்டியும் - சிறுகதைகள்: கஸ்தூரிப் பதிப்பகம், திருத்துறைப்பூண்டி. 1947. (எட்டுக், கதைகள் அடங்கிய தொகுப்பு)
3. மோஹினி - சிறுகதைகள்: கலைமகள் காரியாலயம், சென்னை. 1951. (பதினெட்டுக் கதைகள் அடங்கிய தொகுப்பு)
4. பிச்சமூர்த்தி கதைகள் - ஸ்டார் பிரசுரம், சென்னை. 1960. (இருபது கதைகள் அடங்கிய தொகுப்பு)
5. மாங்காய்த் தலை - கலைமகள் காரியாலயம், சென்னை. 1961. (இருபத்தைந்து) கதைகள் அடங்கிய தொகுப்பு
6. இரட்டை விளக்கு - மல்லிகைப் பதிப்பகம், சென்னை. 1967. (இருபத்திமூன்று கதைகள் கொண்ட தொகுப்பு) *(இச்சிறுகதைகள் தவிர நூல் வடிவம் பெறாத கதைகள் எனப் பத்தொன்பது கதைகளின் பட்டியல் க. மீனாகுமாரி எழுதிய ந. பிச்சமூர்த்தி ஆய்வடங்கல் நூலில் தரப்பட்டிருக்கிறது)*
7. குடும்ப ரகசியம் - நாவல் - கலைமகள் காரியாலயம் சென்னை. 1959
8. காக்கைகளும் கிளிகளும் - சிறுவர் கதைகள் எழுத்து பிரசுரம், சென்னை. 1977
9. குயிலின் சுருதி - வாசகர் வட்டம், சென்னை. 1970. (ஐந்து கவிதைகள் கொண்ட தொகுப்பு)
10. பிச்சமூர்த்தி கவிதைகள் எழுத்து பிரசுரம், சென்னை. 1975
11. காளி (நாடகம்) கலைமகள் காரியாலயம் சென்னை. 1946 (இந்த நாடகம் நேரடியாக நூல்வடிவம் பெற்றது)

